"அடாடா! கோவிலுக்கா போகிறீர்கள்? போகவே கூடாது, ஸார்!"

"ஏன் போகக்கூடாது?"

"குமாரராஜா முத்தையா செட்டியார் கோவிலுக்குப் போகிறாராம் ஸார்! குமாரராஜாவும் கோவிலுக்குப் போகிறது. நீங்களும் போகிறது என்றால் அது நன்றாயிருக்குமா, ஸார்? கொஞ்சங் கூடச் சரியில்லை, ஸார்!"

உண்மையில், குமாரராஜா கோவிலுக்குப் போவதுண்டா என்பது எனக்குத் தெரியாது. விவகாரத்துக்காகத்தான் சொன்னேன். இந்த சம்பாஷணையிலிருந்து சென்னையில் எந்த விஷயத்தையும் எப்படிக் கோணலாகப் பார்க்கிறார்கள் என்பது நேயர்களுக்குத் தெரிந்திருக்கும். ஆனால், தேவகோட்டையில் எப்படி? தமிழ் இசை மகாநாட்டை தேவகோட்டையில் கூட்டியவர்கள் பரிபூரண காங்கிரஸ்வாதிகள்; தீவிர தேசீயப்பற்றுள்ள வாலிபர்கள். மகாநாட்டின் காரியதரிசி ஸ்ரீ டி. ஆர். அருணசலம் சத்தியாக்கிரஹ இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறைவாசம் செய்துவிட்டுத் திரும்பிவந்தவர். அப்போது அலிபுரம் சிறையிலுள்ள ஸ்ரீ சா. கணேசன், இரும்புக் கம்பிகளுக்குள்ளிருந்து, மகாநாட்டுக்கு ஒரு உருக்கமான செய்தி அனுப்பி யிருந்தார்.

## ஆரம்ப வெற்றி

எத்தனையோ நூற்றுக் கணக்கான மகாநாடுகள் நாட்டில் நடக்கின்றன. அவையெல்லாம் "வெற்றிகரமாக நடந்தேறின" என்று பத்திரிகையில் படிக்கிறோம் "வெற்றிகரமாக நடந்தேறின" என்றால். அடிதடி ஒன்றுமில்லால், நடுவில் கலகம் குழப்பம் இவற்றினால் தடைப்



படாமல் "வந்தனோபசாரம்" வரையில் நடந்து முடிந்தது என்றுதான் அர்த்தம். அதேமாதிரி, "தீர்மானங்கள் நிறைவேறின" என்றாலும், அவை ஏகமனதாகவோ பெரும்பாலான வோட்டுக்கள் பெற்றோ மகாநாட்டில் நிறைவேறின என்றுதான் அர்த்தமே தவிர, தீர்மானத்தின் விஷயம் காரியத்தில் நிறைவேறியது என்று அர்த்தமல்ல. இது விஷயத்தில் நமது சாதாரண அநுபவம் என்னவென்றால், மகாநாடுகள் பாட்டுக்குக் கூடித் தீர்மானங்கள் நிறைவேற்ற வேண்டியதுதான்; காரியங்கள் எப்போதும் போல் நடந்து கொண்டிருக்க வேண்டியதுதான்.

ஆனால் தேவகோட்டை மகாநாட்டில் இந்த வழக்கத்துக்கு நேர் விரோதமாகக் காரியம் நடந்தது. அதாவது மகாநாட்டின் நோக்கம் என்னவோ அது, அங்கேயே, மகாநாட்டுப் பந்தலிலேயே **காரியத்தில்** நிறைவேறி விட்டது. அதுவும் முதல் நாள் சாயங்காலமே நடந்து விட்டது. ஆகவே இந்த மகாநாடு ஆரம்பிக்கும்போதே வெற்றிகரமாக ஆரம்பித்துவிட்டது என்று சொல்லலாம்.

முதல் நாள் மாலை மகாநாட்டுப் பந்தலில் நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரியைத்தான் குறிப்பிடுகிறேன். இந்தக் கச்சேரி மூன்றரைமணி நேரம் நடந்தது. ஆரம்பம் முதல் கடைசி வரையில் எல்லாம் தமிழ்ப்பாட்டுக்கள்தான். தமிழ்ப் பாட்டுக்கள் என்றால் துக்கடாக்கள் அல்ல—டாக்கிப் பாட்டுக்களும் அல்ல. விஸ்தாரமாக, நிரவல்—ஸ்வரங்களுடன் பாடக்கூடிய ஒன்பது தமிழ்க் கீர்த்தனங்கள்; ராகம், பல்லவி; தமிழ்ப்பதம்; பாரதியார் கீதங்கள் முதலியவை.

கச்சேரி எப்படி இருந்தது?

ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் குரலில் உள்ள மோகன சக்தியைப் பற்றி எல்லாரும் அறிந்திருக்கிறோம். "இது மனித கணத்தைச் சேர்ந்த மோகனமல்ல; கந்தர்வ, வித்யாதர கணங்களுக்குரியது" என்று வியந்திருக்கிறோம். "எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாட்டே பாடவேண்டியதில்லை; பெருக்கல் வாய்ப்பாட்டைப் பாடினாலும் நாம் கேட்டு அனுபவிக்கலாம்!" என்று ஒரு பிரமுகர் சொன்னார்.

இத்தகைய இனிய குரலில் எம். எஸ். மது அற்புதமான கர்நாடக ராகங்களுக்கு உயிரும் உருவமும் கொடுத்து நம் முன்னால் கொண்டுவந்து நிறுத்துகிறார். சுருதியோடு இழைந்து கார்வை கொடுத்துப் படிப்படியாக மேலேறி ராகங்களின் ஜீவ ஸ்வரங்களை கான மழையாகப் பொழியும் சக்தியை அவரிடம் காண்கிறோம்.

இவ்வளவு இனிமையுடனும் வித்வத்துடனும் தமிழும் கலந்துவிட்டால் கேட்கவேண்டுமா?

செட்டிமார் நாட்டின் எல்லா ஊர்களிலிருந்தும் மிக முக்கியமான பிரமுகர்களெல்லாம் இந்தக் கச்சேரிக்கு வந்திருந்தார்கள். அவர்கள் எத்தனையோ சங்கீதக் கச்சேரிகளைக் கேட்டு அநுபவித்தவர்கள்; சிலர் ரொம்பவும் உயர்ந்த சங்கீத ஞானமுள்ள ரஸிகர்கள். அவர்கள் எல்லாரும், "இந்த மாதிரி உயர்ந்த கச்சேரி இதுவரை கேட்டதில்லை" என்ற அபிப்பிராயத்தை ஏகமனதாகத் தெரிவித்தார்கள்.



முதற் பகுதியிலெல்லாம் கச்சேரியில் வித்வத் ததும்பிக்கொண் டிருந்தது. விஸ்தாரமான ராக ஆலாபனம், நிரவல், ஸ்வரம் ஒன்றிலும் குறைவில்லை. பிடில் கோவிந்தராஜப் பிள்ளையும் "தமிழ்க் கச்சேரியாச்சே" என்று சங்கோசப்படாமல் நாத வெள்ளத்தைப் பொழிந்தார். மிருதங்கம் கிருஷ்ணமூர்த்தி ராவ் பாட்டுக்களை ரொம்பவும் அநுபவித்துக் கொண்டு வெகு அடக்கமாக வாசித்தார். பல்லவி ராகம் முடிந்து பின்பகுதிக்கு வரும் போது, பாட்டு, பக்கவாத்தியம் என்பதெல்லாம் மறந்து போய்விட்டது. தமிழும், இசையும், சபையோரின் உள்ளமும் ஒன்றாய்க் கலந்துவிட்டன. கடைசியில், "யாமறிந்த மொழிகளிலே" என்ற பாரதியார் பாட்டைக் கேதார கௌள ராகத்தில் பாடகி எடுத்தபோது, பழனியாண்டவருக்குக் காவடி எடுக்கையில் பக்தர்களுக்கு உண்டாகும் ஆவேசத்தைப்போல், சபையில் பலருக்கு ஆவேசமே உண்டாகிவிட்டது. "...தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" என்பதில் நின்று அபூர்வ சங்கதிகளைப் போட்டுக் குலுக்கியபோது, சபையிலிருந்த ஒவ்வொருவரின் உள்ளத்திலும் "ஆம் ஆம்" என்ற எதிரொலி உண்டாயிற்று.

கச்சேரி முடிந்ததும், "மகாநாட்டின் நோக்கம் பூரணமாய் வெற்றி அடைந்து விட்டது" என்ற எண்ணம் எல்லாருடைய மனதிலும் ஏற்பட்டது.

ராஜா ஸர் வருத்தம்

மறுநாள் காலையில் மங்களகரமான நாதஸ்வரக் கச்சேரியுடன் மகாநாடு ஆரம்பமாயிற்று. மகாநாட்டுக்காகப் பெரிய பந்தல் போட்டுப் பிரமாதமான ஏற்பாடு

செய்திருந்தார்கள். பந்தல் நிறைய ஐயாயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள். "இனிய தமிழில் பாடி இசைக் கலையை வளர்ப்போம்" என்பது போன்ற அழகிய வாக்கியங்கள் எழுதிய அட்டைகள் மகாநாட்டுப் பந்தலில் எங்கே பார்த்தாலும் தொங்க விடப்பட்டிருந்தன.

வரவேற்புத் தலைவர் ஸ்ரீ. குப்பான் செட்டியார் தமது வரவேற்பு உரையைப் படித்தார். "குப்பான் செட்டியார்" என்றதும் வயதான பெரிய மனுஷரின் உருவம் மனக்கண் முன்னால் வருகிறதல்லவா? உண்மையில், அவர் கதர் அணிந்த ஓர் இளைஞர்; சிறந்த காந்தி பக்தராகக் காணப்பட்டார். ஆனாலும் கொஞ்சங் கூடத் தயங்காமல் செட்டி நாட்டு ராஜா இசைக் கலையை வளர்ப்பதற்காகச் செய்யும் முயற்சியைப் பாராட்டிப் பேசினார்.

பிறகு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் மகாநாட்டைத் திறந்து வைப்பதற்கு எழுந்தார்; ஓரளவு தமது உள்ளத்தையும் திறந்து காட்டினார். "தியாகராஜ உற்சவ ஆரம்ப தினத்தில் ஸ்ரீ. சத்தியமூர்த்தி சொன்னபடி இந்த அநாவசியமான விவாதம் முடிந்து விடுமென்று எதிர்பார்த்தேன். அப்படி முடியாமல் விவாதம் வளர்ந்து வருவது பற்றி வருந்துகிறேன்" என்றார். இந்த மாதிரி அவருக்கு வருத்தம் உண்டு பண்ணியவர் செட்டி நாட்டு ராஜாவின் அத்தியந்த நண்பர்களில் ஒருவரான ஸர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்தான்.

கொஞ்ச நாளைக்கு முன்னால் நடந்த தீக்ஷிதர் தினக் கொண்டாட்டத்தில் நமது அல்லாடி தலைமை வகித்தார்.



"தீக்ஷிதர் கட்சி ரொம்பவும் 'வீக்' ஆகிவிட்டாற் போலிருக்கிறது; அதற்காகத்தான் நம்மைக் கூப்பிட்டிருக்கிறார்கள்" என்று அவர் எண்ணியிருக்க வேண்டும். தீக்ஷிதருக்கு எதிரி தமிழாகத்தான் இருக்கும் என்றும் அவரே தீர்மானித்துக்கொண்டு, தமிழ்ப் பாட்டு இயக்கத்தைப் பற்றி, அது "அநாகரிக இயக்கம்" என்றெல்லாம் வெளுத்து வாங்கிவிட்டார்! அவருடைய கூற்றைப் பாயிண்டு பாயிண்டாக எடுத்துக்கொண்டு ஆணி அடித்தாற்போல் ராஜா ஸர் பதில் சொன்னார். அதைக் கேட்டவர்களுக்கெல்லாம், "நமது பிரசித்தி பெற்ற மாஜி அட்வகேட் ஜெனரல் இவ்வளவு அர்த்தமற்ற வாதங்களைச் சொல்லியிருக்க முடியுமா?" என்று தோன்றியிருக்கும். "ஸர் அல்லாடியிடம் வேறு என்ன கேஸ் கொடுத்தாலும், சங்கீத சம்பந்தமான கேஸ் மட்டும் கொடுக்கக்கூடாது!" என்றும் அவர்கள் எண்ணியிருப்பார்கள்.

"நமக்கு வேறு பாஷைப் பாட்டுக்களில் சிறிதும் துவேஷம் கிடையாது; தமிழ்ப் பாட்டுக்களும் வேண்டும் என்று மட்டுந்தான் கேட்கிறோம்" என்று ராஜா ஸர் வற்புறுத்திச் சொல்லி முடித்தார். பிற பாஷைகளில் தமக்கு துவேஷம் கிடையாதென்பதை அவர் ஸ்ரீ தியாகராஜ உற்சவ நிதிக்கு ரூபாய் ஆயிரம் கொடுத்தும் நிரூபித்திருக்கிறார் என்று அறிகிறேன்.

### டி. கே. சி. பேச்சு

பிறகு, ராஜாஜி அக்கிராசன பீடத்தில் அமர்ந்து ஒன்றரை மணிநேரம் அளவற்ற ஆவேசத்துடன் தமிழ்ப்

பாட்டு இயக்கத்தின் சகல அம்சங்களையும் பற்றிச் சாங்கோபாங்கமாய்ப் பேசினார்.

என்ன? ராஜாஜியா பேசினார்!

ஆமாம்; ராஜாஜிதான் பேசினார்; ஆனால் டி. கே. சி. யின் உடம்பிலிருந்துகொண்டு பேசினார்.

[இப்படி நான் சொல்வதற்கு ஆதாரம் ராஜாஜியேதான். "டி. கே. சி.யின் உடம்பில் நானே இருப்பதாகவும், அவர் சொல்வதையெல்லாம் நான் சொல்வதாகவும் கொள்ள வேண்டியது" என்று ராஜாஜி அவர்கள் மகாநாட்டுக்குச் செய்தி அனுப்பியிருந்தார்.]

டி. கே. சி.யின் அபிப்பிராயங்கள் எல்லாம் ஏற்கெனவே வெளியாகியிருப்பவைதான். ஆகையால், அவருடைய பேச்சைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. அவரைப் பற்றியே ஒரு வார்த்தை சொல்கிறேன். அதுவும் 'இந்த பாஷைத் துவேஷம்' விஷயமாகத்தான். டி. கே. சி.க்கும் 'துவேஷம்' என்னும் வார்த்தைக்குமே வெகுதூரம். அவருக்கு ஸமஸ்கிருத பாஷையில் ரொம்ப அபிமானமே உண்டு. "வயதாகி விட்டதே; கற்றுக்கொள்ள முடியவில்லையே!" என்று வருந்துவார். சென்னையில் நடக்கும் தீக்ஷிதர் தினக் கொண்டாட்டங்களுக்கு வருஷந்தோறும் அவர் தவறுமல் வந்திருக்கிறார். சில பிரமுகர்கள் இம்மாதிரி கூட்டங்களுக்கு வந்து பேச்சு முடிந்ததும் எழுந்துபோய் விடுவார்கள். சிலர் வாசலில் 'குரூப் போட்டோ'வில் நின்றுவிட்டு அந்த வாக்கிலேயே ஸவாரி விட்டு விடுவார்கள்! டி. கே. சி.யோ "விளங்கவில்லை என்று சொல்லிக்கொண்டே கடைசி வரையில் இருப்பார்.



நேற்றுப் பாட ஆரம்பித்த கற்றுக்குட்டி வித்வான் பாடினாலும் கடைசி வரையில் இருந்து கேட்டுவிட்டு, அவரிடம், "நன்றாய்ப் பாடினீர் ஐயா! ஸாவேரி கீர்த்தனம் ரொம்ப பேஷ்!" என்று இப்படி ஏதாவது சொல்லி விட்டுத்தான் போவார். உற்சாகம் ரொம்ப அதிகமாயிருந்தால், "பாட்டிலே பாவமே வந்து விட்டதே!" என்பார்.

## கோதண்டராமன் பசு

ஆகவே, இந்தத் தமிழ்ப் பாட்டு இயக்கத்தில் சேர்ந்த பிரமுகர் எவருக்கும் பிற பாஷைகளின்மீது துவேஷம் இல்லை. "தமிழை துவேஷித்துத் தள்ள வேண்டாம்" என்று மட்டுந்தான் அவர்கள் கேட்டுக் கொள்கிறார்கள். தீக்ஷிதர் தினக் கொண்டாட்டத்தில் ஸர் அல்லாடி பேசும்போது, "பாஷையில் என்ன இருக்கிறது? ஜெர்மன் சங்கீதம், ருஷிய சங்கீதம்—எல்லாம் எனக்கு நன்றாய்த்தானிருக்கிறது" என்றார். "ஜெர்மன் பாட்டையும் ருஷியாவின் பாட்டையும் கேட்பேன்; தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் எது வேணுமானாலும் கேட்பேன்; தமிழ்ப் பாட்டு மட்டுந்தான் கூடாது" என்று சொன்னால், அது கோதண்டராமன் பசுவை ஞாபகப் படுத்துகிறதல்லவா?

ஒருவர் தம் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து இராமாயண பாராயணம் செய்வது வழக்கம். ஒருநாள் பாராயணம் செய்து கொண்டே வாசலில் உலர்த்தியிருந்த நெல்லையும் பார்த்துக் கொண்டிருந்தார். பாராயணம் முடிந்து, மங்கள சுலோகம் சொல்லிக் கொண்டிருக்கிறார் :—

"ஸ்வஸ்திப்ர ஜாப்ய: பரிபாலந்தாம்
ந்யாயேன மார்க்கேன மஹிம்மஹேசா:
கோப்ராம்மணேப்ய சுபமஸ்து நித்யம்..."

என்பது வரையில் சொன்னார். "லோகாஸ் ஸமஸ்தாஸ் ஸுகினோபவந்து' என்னும் கடைசி வரி பாக்கி. இந்த நிலையில், வீட்டு வாசலில் உலர்த்தி யிருந்த நெல்லை அடுத்த வீட்டுக் கோதண்டராமனுடைய பசு வந்து தின்றது அவர் கண்ணில் விழுந்து விட்டது.

"கோப்ராம்மணேப்ய சுபமஸ்து நித்யம்
கோதண்டராமன் பசு நீங்கலாக!"

என்று சுலோகத்தை முடித்துவிட்டு, ஒரு தடியைத் தூக்கிக்கொண்டு போய்ப் போட்டார் ஓங்கி ஒரு அடி!

தமிழை இந்தக் கோதண்டராமன் பசுவைப்போல் நடத்தக்கூடாது என்பதுதான் கோரிக்கை. அதிலும் தமிழ்ப் பசு பிறத்தியார் வீட்டு நெல்லைத் தின்கிறதில்லையல்லவா? தமிழ்ப் பசுவின் நெல்லைத்தானே மற்ற ஊர்ப் பசுக்களெல்லாம் வந்து தின்றுகொண்டிருக்கின்றன?

**சிதம்பரம் தீர்மானம்**

"துவேஷம் இல்லை என்கிறீரே? சிதம்பரம் மகாநாட்டுத் தீர்மானத்தைப்பற்றி என்ன?" என்று கேட்கலாம். சாதாரணமாக மகாநாட்டுத் தீர்மானங்களைப் பற்றி எனக் கேற்பட்டிருந்த அலட்சிய புத்தியினால், சிதம்பரம் தீர்மானங்களைப் பற்றி நான் முதலில் கவனிக்கவேயில்லை. அப்புறம் அநேகர் அடிக்கடி அதைப்பற்றிப் பயங்கரமான குரலில் பேசிய பிறகு சிதம்பரம் தீர்மானம் ரொம்ப ரொம்ப அக்கிரமமாய்த்



தானிருக்க வேண்டுமென்று தோன்றியது. டி. கே. சி. அவர்களையே பிடித்து, "அந்த அக்கிரமத் தீர்மானத்தை ஒரு வார்த்தை தவறாமல் சொல்லுங்கள்" என்றேன்.

அந்த அசல் தீர்மானம் இதுதான் :—

**"தமிழ் நாட்டில் தமிழர்களுக்காக நடக்கும் சங்கீதக் கச்சேரிகளில் தமிழ்ப் பாட்டுக்களுக்கு முக்கியமும் கௌரவமும் கொடுத்துப் பாடச் செய்ய வேண்டுமென்று சங்கீத சபைகளையும் அவைகளை ஆதரிப்பவர்களையும் கேட்டுக் கொள்ளலாயிற்று."**

இவ்வளவுதான் விஷயம்! மற்ற பாஷைப் பாட்டுக்களை விலக்கச் சொல்லவில்லை; தமிழ்ப் பாட்டுக்கள் மட்டுமே பாடவேண்டுமென்று கேட்கவில்லை; **பெரும்பாலும் தமிழ்ப் பாட்டுக்கள் பாடவேண்டும் என்று கூடக் கேட்கவில்லை!** தமிழ்ப் பாட்டுக்கள் எவ்வளவு, மற்ற பாஷைப் பாட்டுக்கள் எவ்வளவு என்பதையெல்லாம் தீர்மானிக்கும் பொறுப்பை சங்கீத வித்வான்களுக்கே விட்டிருக்கிறது. அவர்களை எவ்விதமான நிர்ப்பந்தத்துக்கும் உள்ளாக்கவில்லை. தமிழுக்கு முக்கியமும் கௌரவமும் கொடுத்துப் பாடவேண்டுமென்றுதான் கேட்கிறது. அதாவது, "தமிழ்ப் பாட்டு என்றால் கச்சேரியின் முடிவில் துக்கடா ரகத்தில் சேர்த்துப் பாடுகிறார்களே, அம்மாதிரி செய்ய வேண்டாம்; முதலிலேயே தமிழ்க் கீர்த்தனங்களையும் சேர்த்துக் கொண்டு பாடவேண்டும்" என்றுதான் கேட்டுக் கொள்கிறது. இதுவும், தமிழ் நாட்டில் தமிழர்களுக்காக நடக்கும் கச்சேரிகளில்தான்.

**மேலே குறிப்பிட்ட சிதம்பரம் மகாநாட்டுத் தீர்மானத்தையேதான் தேவகோட்டைத் தமிழிசை மகாநாடும் ஊர்ஜிதம் செய்து நிறைவேற்றி யிருக்கிறது.**

இதில் யாரும் எவ்வித ஆட்சேபமும் சொல்வதற்கு இடம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லே. "தமிழைக் கௌரவிக்க மாட்டோம்" என்று தமிழ் நாட்டில் யாராவது சொன்னுல், அது இயற்கைக்கே மாறுபாடான விஷயமா யிருக்கும்.

"தீர்மானம் இவ்வளவுதானே சொல்கிறது? அப்படியானுல் தனித் தமிழ்க் கச்சேரிகள் என்னத்திற்கு?" என்று கேட்கலாம். "இது பிரசாரத்திற்காகவும், புதிய புதிய தமிழ்க் கீர்த்தனங்களே வெளியில் கொண்டுவருவதற்காகவுந்தான்" என்று முன்னமே சொல்லியிருக்கிறது. தீக்ஷிதர் கொண்டாட்டத்தின்போது மூன்று நாளும் தீக்ஷிதர் கிருதிகளேயே எல்லாரும் பாடினுல் அதை யாராவது ஆட்சேபிக்கிருர்களா? ஸ்வாதித் திருநாள் கிர்த்தனங்களேயே தனியாக ரேடியோவில் பாடினுல் யாரேனும் ஏன் என்று கேட்கிருர்களா? அப்படியிருக்க, தமிழ் ஸாஹித்ய கர்த்தாக்கள் எல்லாருக்கும் சேர்த்துச் சில சமயங்களில் அத்தகைய கௌரவத்தைக் கொடுக்கக் கூடாதா? "கூடாது" என்ருல், மறுபடியும் கோதண்டராமன் பசுமட்டும் என்ன பாவம் செய்தது என்றுதான் கேட்க வேண்டும்.

* * *

தேவகோட்டை மகாநாடு சம்பந்தமாக இன்னும் எவ்வளவோ வைபவங்கள் நடந்தன. நாமக்கல் ராமலிங்கம் பிள்ளே அருமையான கருத்துக்களும் நகைச்சுவையும் ததும்பிய பாடல்களேப் பாடிக் காட்டினுர். மதுரை மணியும், திருச்சி சகோதரர்களும் உயர்ந்த கச்சேரி பாணியில் தமிழ்ப்பாட்டுக்களேப் பாடினுர்கள். 'தாளச் சிலம்ப வித்தைகளுக்கு தமிழ்ப் பாட்டுக்களும், தாராளமாக இடம் கொடுக்கும்' என்பதை சித்தூர் சுப்பிரமண்யப்பிள்ளே கடம், மோர்சிங், மிருதங்கம், கஞ்சிரா, மருங்காபுரி பிடில் இவ்வளவுடனும் நிரூபித்துக் காட்டினுர். ஸ்ரீ மாரியப்ப சுவாமிகள் தமது சொந்த தமிழ் ஸாஹித்தியங்களே உள்ளுருகி, ஊனுருகிப் பாடினுர். பனேயப்பட்டி ஸ்ரீ வினதீர்த்தான் செட்டியார்—ஆஹா! பலே!—அரைமணி நேரத்தில் நாலுமணிக் கச்சேரியை—தானம் உள்படப்—பாடித் தீர்த்து விட்டார்!

நான் ரயிலுக்குக் கிளம்பிய பிறகு ஸ்ரீ தண்டபாணி தேசிகர் பாடியிருப்பார். மறுநாள் எவ்வளவோ இசை விருந்துகளும் பேச்சு விருந்துகளும் காத்திருந்தன. ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அம்மாள் பேசியும் பாடியும் இருப்பார். ஸ்ரீ தியாகராஜ பாகவதர் இன்னிசையைப் பொழிந்திருப்பார். இவை யெல்லாம் கேட்க எனக்குத்தான் கொடுத்து வைக்கவில்லே. மொத்தத்தில், தேவகோட்டை மகாநாடு மிகவும் பிரயோஜனமாகவும், பூரண வெற்றியுடனும் நடந்திருக்கிறது. இதை இவ்வளவு ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் நடத்திய செட்டிநாட்டின் தேசீய இளேஞர்களே எவ்வளவு பாராட்டினுலும் போதாது.

# அரியக்குடியும் தமிழும்

எனக்கு வந்த கடிதங்களில் ஒன்று வருமாறு: "அரியக்குடியார் தமிழ் இசைக்கு இவ்வளவு எதிர்ப்பாய் இருப்பதன் மர்மம் என்ன ? எதற்காகப் 'பாகிஸ்தான்' கொள்கையை (சங்கீதத்தில்) கொண்டு வந்துவிடுகிருர் ?...தங்களுக்கு இதன் ரகசியம் தெரிந்திருந்தால், தயவு செய்து சொல்லவும்."

மேற்படி கடிதத்தில் கேட்டிருக்கும் இரகசியத்தை உடைத்து விடுவதுதான் உசிதம்.

பார்க்கப் போனல், உடைத்து விடுவதற்கு இரகசியம் ஒன்றும் இருப்பதாகவே தெரியவில்லை.

அரியக்குடி இராமானுஜய்யங்கார் உண்மையில் தமிழிசை இயக்கத்துக்கு எதிர்ப்பா யிருக்கிருரா ? அப்படி யிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. 'பாகிஸ்தான்' கொள்கை என்று நண்பர் குறிப்பிடுவது எதை என்று நேயர்களில் பலருக்குத் தெரிந்திராது. ஸ்ரீ ராமானுஜய்யங்கார் சமீபத்தில் தமிழ்ப் பாட்டுப் பாடுவதின் சம்பந்தமாகத் தமது கருத்தை வெளியிட்டிருக்கிருர். சங்கீதக் கச்சேரிகளில் பாடும் உருப்படிகளில் பாதி தமிழ்ப் பாட்டாய்ப் பாடுவதற்கு ஐயங்கார் தமது சம்மதத்தைத் தெரிவித்திருக்கிருர். அதாவது, இவ்விதம் பத்திரிகைகளில் வெளியாகி யிருக்கிறது. இது உண்மையானல், தமிழிசை இயக்கத்தை ஐயங்கார் எதிர்க்கிருர் என்பதாக நாம் சொல்வதற்கு இல்லை. அந்த இயக்கத்துக்குப் பெரும் ஆதரவு கொடுக்கிருர் என்றே சொல்ல வேண்டும்.

இன்னும் பார்க்கப்போனல், தமிழிசை இயக்கத்துக்கு இது ஒரு சிறந்த வெற்றியென்றே நான் சொல்லத் தயாரா யிருக்கிறேன்.

நேற்று வரை, எத்தனையோ சங்கீதக் கச்சேரிகளை ஐயங்கார் ஒரு தமிழ்ப் பாட்டுக் கூடப் பாடாமல் முடித்திருக்கிருர் ; நான் கேட்டிருக்கிறேன். இன்னும் அநேக கச்சேரிகளைக் கடைசியில் இரண்டொரு தமிழ்த் துக்கடாக்கள் மட்டும் பாடி முடித்திருக்கிருர். ஐயங்கார் மட்டும் அல்ல ; அநேகமாய்ப் பெரிய வித்வான்களின் கச்சேரி யெல்லாம் வெகு காலமாக இப்படித்தான் இருந்து வந்தது. சில வருஷங்களுக்கு முன்னல், முசிரி சுப்பிரமணிய ஐயர் பல்லவிக்கு முன்னல் ஒரு தமிழ்க் கீர்த்தனம் பாடி விட்டாரென்று நாமெல்லாம் பரமானந்த மடைந்தோம் !

அந்த நாளெல்லாம் போய், இப்போது அரியக்குடியார் கச்சேரியில் பாதி உருப்படிகள் தமிழில் பாட முன் வந்திருக்கிருரென்ருல், அது பெரிய புரட்சிகரமான மாறுதல் என்றே எனக்குப் படுகிறது. இம்மாதிரி அரியக்குடி சொன்னதுடன் நிற்காமல் காரியத்திலும் செய்து காட்ட வேண்டுமே யென்று மட்டுந்தான் கவலைப்படுகிறேன்.

அரியக்குடியார் பாதி தமிழ்ப் பாட்டுப் பாடுவதாக முன் வந்திருப்பதில் இன்னொரு விசேஷம் இருக்கிறது. "சங்கீதத்துக்கு வார்த்தைகளே பிரதானமில்லை— அர்த்தம் தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை" என்று கருதுகிற கோஷ்டியைச் சேர்ந்தவர் அவர். சங்கீத வித்வான்கள்—ரஸிகர்களுக்குள் இம்மாதிரி பெரிய கோஷ்டி ஒன்று இருக்கத்தான் செய்கிறது.

"தாளக் கட்டுடன் சங்கதிகளை நிறையப் போட்டுப் பாடுவதற்கு அனுகுணமா யிருப்பதுதான் உயர்ந்த சாஹித்யம்" என்பது இவர்கள் அபிப்பிராயம். ஆகை யினல்தான், ஐயங்கார்வாள் எந்த பாஷையில் பாடிறு லும், வார்த்தைகளைப்பற்றி அதிகமாகக் கவனிப்ப தில்லை. இத்தகைய அபிப்பிராயமுடையவர், "பாதி தமிழ் உருப்படிகள் பாடுகிறேன்" என்ருல், இது விஷயத்தில் பொதுஜன அபிப்பிராயத்தை மதித்துத் தான் அவ்வளவு தூரம் அவர் ஒப்புக்கொண்டிருக்க வேண்டும். இது மகிழ்ச்சிக்குரிய விஷயமல்லவா?

இதற்கு மேலேயும் அவர் சென்று தமிழ்ப் பாட்டுக் களைப் பாதிக்கு அதிகமாகப் பாடுவது, கச்சேரிகளுக் குப் போகும் ரஸிகர்களையே இனிமேல் பொறுத்திருக் கிறது. தமிழ்ப் பாட்டுக்களையே சபையோர் அதிகம் ரஸித்து அநுபவிக்கிருர்கள் என்பதை ஐயங்கார் காணும் போது தமிழிசையில் அவருடைய உற்சாகமும் வளரத் தான் செய்யும். அப்போது 'சங்கீத பாகிஸ்தான்' கொள்கையும் போய்விடும்.

நற்சமயம் ஐயங்காரைப் போன்ற வித்வான்கள் 'பாகிஸ்தான் கொள்கையை அவலம்பிப்பதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. தியாகய்யர், தீக்ஷிதர், சாமா சாஸ்திரிகளின் சாஹித்யங்களில் நமது வித்வான் களுக்குள்ள மதிப்பும் பக்தியும் தான் அககாரணம். அதோடு, ஐயங்கார் அவர்களின் குருவான 'பூச்சி' சீனிவாச ஐயங்காரும் தெலுங்கிலே தான் சாஹித்யம் செய்திருக்கிருர். மேற்படியார்களுடைய கீர்த்தனங் களுக்கெல்லாம் கச்சேரிகளில் அடியோடு இடம் இல் லாமல் போய்விடுமோ என்று ஐயங்கார் போன்றவர் கள் பயப்படுவதாகத் தெரிகிறது.



ஆனல், தமிழ் மக்கள் அவ்வளவு குறுகிய நோக் கம் கொண்டவர்களல்ல என்பது பிரசித்தியான விஷ யம். டாக்டர் டாகூர் வங்காளியில்தான் கவிதைகள் செய்தார்; அவரிடம் தமிழர்கள் காட்டிய பக்திக்கும் மரியாதைக்கும் அளவுண்டா? ஆகவே, கர்நாடக சங் கீதத்துக்குத் தொண்டு செய்திருக்கும் எல்லா சாஹித் திய கர்த்தாக்களுக்கும்—புரந்தர தாஸர், தீக்ஷிதர், தியாகய்யர், சாமா சாஸ்திரிகள்—ஆகியவர்களுக் கெல்லாம் மரியாதை செய்யவும், அவர்களுடைய சாஹித்யங்களை வளர்க்கவும் தமிழ் நாட்டார் எப்போ தும் சித்தமா யிருப்பார்கள். மிகப் பெரும்பாலான தமிழ்நாட்டு சங்கீதக் கச்சேரிகளில் இதுவரை தமி ழையே ஒதுக்கி வைத்து வந்திருப்பதனல்தான் தமிழிசை இயக்கத்துக்கும் தமிழ்ப் பாட்டுக் கிளர்ச்சிக் கும் அவசியம் ஏற்பட்டது என்பதை மறந்துவிடக் கூடாது. தமிழ்ப் பாட்டுக்களுக்கு நமது கச்சேரிகளில் உரிய கௌரவ ஸ்தானம் கிடைக்கும்போது, இத்த கைய கிளர்ச்சிக்கும் அவசியமில்லாமல் போய்விடும்.

எனக்கென்னமோ, அரியக்குடி ஸ்ரீ. ராமானு ஜய்யங்கார் அவர்களிடம் பூரண நம்பிக்கை இருக்கிறது. வைஷ்ணவத்தின் ஆதி குருக்களான ஆழ்வாராதி களின் தமிழன்பு அவர் இருதயத்திலும் இடம் பெற்றுத் தானிருக்கும். அத்துடன் அவர் தமிழிலே ஸாகித்யம் பார்த்திருக்கிருர் என்பதாகக் கேள்விப்படுகிறேன். அவர் மனது வைத்தால் எவ்வளவோ பழைய தமிழ்ப் பாட்டுக்களுக்கும், புதிய தமிழ்ப் பாட்டுக்களுக்கும், மெட்டுப்போட்டு மெருகு கொடுத்துக் கச்சேரிகளில் பாடுவதற்குத் தகுதியாக்கலாம்.

# நிரவல் விஷயம்

"ஒரு சங்கீதக் கச்சேரி உயர்வாக இருந்தது என்று சொல்லவேணுமானல், அதில் முக்கியமாக என்ன அம்சம் இருக்கவேண்டும்? இதற்குப் பலர் பலவிதமாகப் பதில் சொல்லலாம். என்வரையில், இதற்கு ஒரே பதில்தான் சொல்லக்கூடும். பாடகர் ராக ஆலாபனம் செய்யும்போது, இரண்டு மூன்று இடத்திலாவது, "ஆஹா!" "த்ஸெள த்ஸெள" என்று நமக்குச் சொல்லத் தோன்றினல், அதுதான் உயர்ந்த கச்சேரி. ரஸிகர்கள் நிறைந்த சபையில், ராக ஆலாபனத்தின்போது இம்மாதிரி எவ்வளவுக் கெவ்வளவு கிளர்ச்சி உண்டாகிறதோ, அவ்வளவுக்கு அது உயர்ந்த கச்சேரி!

கர்நாடக சங்கீதத்தில் பாடகர்களின் மனோ தர்மத்துக்குப் பூரணமாக இடங்கொடுப்பது ராக ஆலாபனம். ரஸிகர்களை மெய்ம் மறக்கச்செய்து இசை வெள்ளத்தில் மூழ்கடிப்பது ராக ஆலாபனமே. கற்றுக்குட்டிப் பாடகருக்கும் கைதேர்ந்த வித்வானுக்கும், அவ்விதமே கிராமபோன் பாடகருக்கும் மனோதர்மமுள்ள உண்மை வித்வானுக்கும் ராக ஆலாபனத்திலேதான் பளிச்சென்று வித்தியாசம் கண்டுபிடிக்கலாம்.

சங்கீதக் கச்சேரிகளில் 'நிரவல்' என்பதாக ஒரு அம்சம் உண்டு அல்லவா? ஒரு கீர்த்தனத்தில் அநுபல்லவியிலோ சரணத்திலோ, ஒரு வரியை எடுத்துக் கொண்டு, அதையே திருப்பித் திருப்பி ராகத்தின் களை பூரணமாய் வரும்படி சஞ்சாரம் செய்வார்கள். நிரவலுக்கு எடுத்துக்கொள்ளும் இடம் சொல்லழகு பொருந்தியதாயும், பொருள் விளங்குவதாயு மிருந்தால் 'சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி' பொழிந்தது போலிருக்கும்.

உதாரணமாக, "நின்னருள் இயம்பலாகுமோ" என்னும் பந்துவராளி கீர்த்தனையில்,

"இன்னல் கூட்டி—இன்பம் ஊட்டி
இந்திர ஜால வித்தை காட்டி"

என்னும் அடியை வைத்துக்கொண்டு நல்ல பாடகர், நிரவல் செய்யும்போது, இசைக் கலையின் இந்திர ஜாலங்களை நாம் பார்ப்பதோடுகூட பகவத் சிருஷ்டியின் லீலா விபூதிகளையும் மனக்கண்ணுல் பார்த்து அநுபவிக்க முடிகிறது.

"உண்டுகுல தெய்வராமன்" என்னும் தோடி கீர்த்தனத்தில்,

"தொண்டுசெய்து ராமா ராமா வென்று
துதிப்போர் குடிதாங்கும் கருணைநிதி"

என்னும் அநுபல்லவியை நன்ருக மட்டும் நிரவல்செய்து பாடினல், சபையோரின் உள்ளம் உருகிக் கண்ணீர் பெருகும்படி செய்துவிடலாம்.

இதற்கு மாருக, நிரவலில் ரஸமேயில்லாமல் அடித்துக் கர்ணகடூரமாய்ச் செய்வதற்கும் வழி யிருக்கிறது. "எடுநம்மின" என்னும் கீர்த்தனத்தில் "மட்டி குண்ட கண்டே" என்னும் அடியை வைத்துக்கொண்டு, நிரவல்செய்து ஸ்வரமும் பாடுவதை நான் கேட்டிருக்கிறேன். "பதநிபத ம—மட்டி" "பதநிபதம—மட்டி" என்று அடுக்கிக் கொண்டே போவார்கள். நல்லவேளை

யாய் நிஷாதத்தில் நிறுத்தி "மட்டி" என்று எடுக்க வசதியில்லாமலிருக்கிறது. அந்த வசதி யிருந்தால், "நீ மட்டி!" என்று பாட்டுக் கேட்க வந்தவர்களையே வெளுத்து வாங்கலாம்.

"ஸரோஜ தளநேத்ரி" என்னும் சாமா சாஸ்திரிகளின் சங்கராபரண கீர்த்தனத்தில், இரண்டு சரணங்கள் இருக்கின்றன. முதல் சரணத்தின் முதல் அடி, "**கோரி வச்சின வாரிகெல்லனு**" என்று ஆரம்பிக்கிறது. பெரும்பாலும் இதை எடுத்துக் கொண்டுதான் பாடகர்கள் நிரவல் செய்வார்கள். எவ்வளவுதான் அழகாக ராக சஞ்சாரம் செய்தாலும், 'கோரி', 'வாரி' என்று திருப்பித் திருப்பிக் காதில் விழும்போது நாராசமாகி, நிரவல் போதும் போதும் என்று கதறச் செய்துவிடும்.

ஒரு சமயம் ஒரு இளம் பாடகர் சரணத்தைச் சட்டுப்புட்டென்று பாடிவிட்டு இரண்டாவது சரணத்தில் "**ஸாமகான விநோதினி**" என்று ஆரம்பிக்கும் அடியை எடுத்துக்கொண்டு நிரவல் செய்தார். சொற்களின் இன்னிசையும், சங்கராபரண ராகத்தின் கம்பீரமும் சேர்ந்து நிரவலைக் கர்ணாமிர்தமாக்கி விட்டன."

நிரவலைப்பற்றி மேற்கண்ட விதமாக நான் ஒரு கட்டுரை எழுதியிருந்தேன். மேற்படி கட்டுரைக்கு டி. டி. கே. பதில் எழுதப்போகிறார் என்று ஊரில் பிரஸ்தாபமா யிருந்ததோடு, டெலிபோனில்கூட எனக்குச் செய்தி வந்தது. "டி. டி. கே. பதில் எழுதக்கூடியதாக அக் கட்டுரையில் என்ன இருக்கிறது?" என்று நான் ஆச்சரியப்பட்டதுடன் என்ன பாஷையில் எழுதப் போகிறார் என்றும் வியந்து கொண்டிருந்தேன். ஒரு



வேளை தெலுங்கில் எழுதுவாரோ என்று தெலுங்குப் பத்திரிகைக்காரர்களைக்கூட விசாரித்துக் கொண்டிருந்தேன். கடைசியில், அதை அவர் தமிழிலேயே எழுதித் தீர்த்துவிட்டார்.

தமிழிசை விவாதத்தினால் வேறு நன்மை எது விளைந்தாலும் விளையாவிட்டாலும் ஒரு நல்ல பலன் அவசியம் ஏற்பட்டிருக்கிறது. அது ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரைத் தமிழில் கட்டுரை எழுதும்படிச் செய்து விட்டதுதான்.

டி. டி. கேயின் கட்டுரையைப் படித்ததிலிருந்து எனக்கு அவர் விஷயத்தில் ஏற்பட்டிருந்த ஒரு சந்தேகம் நிவர்த்தியானது பற்றி மிகவும் சந்தோஷமா யிருக்கிறது. அநேக விஷயங்களில் ரொம்பவும் சரியான அபிப்பிராயங் கொண்டவரா யிருக்கும் டி. டி. கே. சங்கீத விஷயத்தில் மட்டும் ஏன் இவ்வளவு அபத்தமான அபிப்பிராயங்களைப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டுமென்னும் ஆச்சரியம் எனக்கு ரொம்பவும் இருந்தது. அதற்குக் காரணம் சகவாச தோஷந்தான் என்று இப்போது விசதமாய்த் தெரிகிறது.

சங்கீத விஷயத்தில் டி. டி. கே. தமது சொந்த அபிப்பிராயத்துக்கு மதிப்புக்கொடாமல் சிநேகிதர்களின் அபிப்பிராயங்களைப் பெரிதும் நம்புகிறவர் என்று அவருடைய கட்டுரையிலிருந்து வெளியாகிறது. டி. டி. கேயின் சங்கீத சிநேகிதர்களோ வெகு ஆச்சரியமான பிரகிருதிகள்! அவர்களில் சிலர், "சங்கீதம் கேட்கும்போது ஒரு அழகிய பெண் உருவம் எதிரில் இராவிட்டால் என்ன பயன்?" என்று சொல்லக்கூடியவர்கள்.

இன்னும் சிலர், "கச்சேரி செய்யும் ஸ்திரீ சர்வ அவலட்சணமாய் இருந்தால், போனல் போகிறதென்று அவளுடைய பாட்டைக் கேட்பேன்; இல்லாவிட்டால் புருஷர்களின் கச்சேரிக்குத்தான் போவேன்" என்று ஆணையிடுகிறவர்கள். அவருடைய நண்பர் இன்னொருவர், "எதைச் சகித்தாலும் சகிப்பேன்; தோடி ராகத்தை மட்டும் சகிக்க மாட்டேன். தோடியைக் கேட்டால், பிராணனை விடுவேன்" என்கிறவர். இன்னொருவர், "வீணை தனம்மாள் வராளி ராகத்தையும் மோகன ராகத்தையும் தம்முடன் எடுத்துக்கொண்டு போய்விட்டார். அவர் இருக்குமிடம் போய்த்தான் இனிமேல் அந்த ராகங்களைக் கேட்கவேண்டும்; பூலோகத்தில் கேட்க முடியாது" என்று சொல்கிறவர்.

இப்பேர்ப்பட்ட அபூர்வமான சங்கீத ரஸிகர்களுடைய அபிப்பிராயங்களை அடிக்கடி கேட்டுக் கொண்டிருப்பதிலுல்தான் டி. டி. கே. யின் சங்கீத அபிப்பிராயங்கள் இவ்வளவு படு குட்டிச் சுவராய்ப் போயிருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. எனவே, அவருடைய கட்டுரையின் நடையும் விஷயப் போக்கும் அபத்தமாயும், குழப்பமாயும் முன்னுக்குப் பின் முரணும் இருப்பதிலும் ஆச்சரியம் இல்லை.

சங்கீத விஷயத்தில் எவ்வளவோ அபிப்பிராய பேதங்களுக்கு இடமுண்டு என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனல் எதில் கொஞ்சங்கூட அபிப்பிராய பேதத்துக்கு இடங்கிடையாதோ, அதை ஸ்ரீ டி. டி கிருஷ்ணமாச்சாரியார் எடுத்துக் கொண்டு வாதம் தொடுத்திருக்கிருர். அவ் விஷயம் என்னவென்று பார்க்கலாம் :—



"ஸரோஜ தள நேத்ரி" என்று ஆரம்பமாகும் சாமா சாஸ்திரிகளின் கீர்த்தனை ஒன்று இருக்கிறது. சங்கராபரண ராகத்தில் அமைந்தது. இந்தக் கீர்த்தனத்துக்கு இரண்டு சரணங்கள் உண்டு. முதல் சரணமானது,

"கோரிவச்சின வாரிகெல்லனு"

என்று ஆரம்பமாகிறது. இரண்டாவது சரணமோ,

"ஸாம கான விநோதினி"

என்று தொடங்குகிறது.

இந்த இரண்டு சரணங்களில் முதல் சரணத்தின் முதல் அடியை எடுத்துக்கொண்டு பாடகர்கள் பலர் நிரவல் செய்வது வழக்கம். அதாவது அந்த அடியைப் பல தடவை ராகபாவம் தோன்றத் திருப்பித் திருப்பிப் பாடுவார்கள்.

சமீபத்தில், நான் கேட்ட ஒரு இளம் பாடகர் மேற்படி "கோரி வச்சின" என்னும் அடியை நிரவலுக்கு எடுத்துக் கொள்ளாமல், "ஸாம கான விநோதினி" என்னும் அடியை எடுத்துக்கொண்டு நிரவல் செய்தார். இதை நான் பாராட்டி எழுதினேன். 'கோரி வச்சின வாரி கெல்லனு' என்னும் சொற்களைக் காட்டிலும் 'ஸாம கான விநோதினி' என்பது செவிக்கு மதுரமாயிருக்கிறதென்று சொல்லி யிருந்தேன்.

இந்த விஷயத்தைப் பற்றித்தான் டி. டி. கே. தமது அபிப்பிராய பேதத்தை வெளியிட முன் வந்தார். அந்த பேத அபிப்பிராயமும் அவருடைய சொந்த அபிப்பிராயமில்லை; நண்பர்களின் அபிப்பிராயந்தான்.

"கோ – ரிவச்சின வாரி – கெல்லனு
கோ – ர்கெ லொஸகே பிருதுகதா"

என்ற இடம் சங்கராபரணத்தின் ஜீவஸ்வரங்கள் அமைந்துள்ள இடம் என்று அவருடைய நண்பர்கள் அடிக்கடி சொல்லி யிருக்கிருர்களாம். அப்பேர்ப்பட்ட இடத்தை என்னுல் அநுபவிக்க முடியாமல் போய் விட்டதே என்று டி. டி. கே. வருத்தப்படுகிருர். மேலும், "இதனுல் இதை எழுதியவர் சங்கீதம் தெரியாதவர் என்றும், **என் நண்பர்கள் சங்கீதம் தெரிந்தவர்கள்** என்றும் நான் சொல்ல வரவில்லை" என்று குறிப்பிட்டிருக்கிருர்.

அவருடைய நண்பர்கள் சங்கீதம் தெரிந்தவர் களோ, என்னமோ, எனக்கும் தெரியாது. ஆனுல் கீர்த்தனத்தின் அமைப்பைக் குறித்து அவர்கள் டி. டி. கே. க்கு ஒன்றுமே தெரியப்படுத்தவில்லை யென்பது நிச்சயமாய்த் தெரிகிறது. அதை அவருக்குத் தெரியப்படுத்தும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ள வேண்டியதா யிருக்கிறது.

தயவு செய்து கவனிக்கவேணடும். கீர்த்தனம் என்பதில் பல்லவி, அநுபல்லவி, சரணம் என்பதாக மூன்று பிரிவுகள் உண்டு. சாதாரணமாக, பல்லவி யானது அந்தந்த ராகத்துக்குரிய கீழ் ஸ்வரங்களிலும், அனுபல்லவி மேல் ஸ்வரங்களிலும் அமைந்திருக்கும். சரணம், மத்திய ஸ்வரங்களில் ஆரம்பித்து, பிற்பகுதி யில் அநுபல்லவியைப்போல் மேலே போகும்.

மேற்சொன்ன கீர்த்தன அமைப்பு முறைக்கு விதி விலக்குகள் உண்டு, ஆனுல் விதி விலக்கே இல்லாத ஒரு விஷயம் இருக்கிறது. அது என்னவெனில், ஒரு



சரணத்துக்குமேல் இருக்குமாளுல், முதல் சரணத்தைப் போல்தான் இரண்டாம் சரணமும் இருக்கும்; அப் படியேதான் மூன்ருவது, நாலாவது சரணங்களும்.

பல்லவி, அநுபல்லவி, சரணம் இவை ஒன்றுக் கொன்று வித்தியாசமா யிருக்குமே தவிர, **ஒரு சரணத் துக்கும் இன்னொரு சரணத்துக்கும் ராகத்தின் ஸ்வர அமைப் பில் எவ்வித வித்தியாசமும் இராது.**

ஆகவே முதல் சரணத்தின் முதல் அடியில் ஒரு ராகத்தின் ஜீவஸ்வரமோ, மரணஸ்வரமோ இருக்கு மாளுல், அதே ஜீவஸ்வரம் அல்லது மரண ஸ்வரம் இரண்டாவது சரணத்தின் முதல் அடியிலும் இருந்தே தீரும்.

கீர்த்தன அமைப்பைக் குறித்த இந்த அடிப்படை யான விஷயம் டி. டி. கே.யின் சங்கீத நண்பர்களுக் குத் தெரியவே தெரியாதோ, தெரிந்தும் அவர்கள் டி. டி. கே.யிடம் சொல்லாமல் துரோகம் செய்து விட்டார் களோ, தெரியவில்லை. இதனுல்தான் அவருக்கு நான் குறிப்பிட்ட விஷயம் இன்னதென்பதே விளங்காமல், சங்கராபரணத்தின் ஜீவ ஸ்வரத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டார்.

சங்கராபரணத்தின் ஜீவ ஸ்வரங்கள் மேற்படி கீர்த்தனத்தின் இரண்டு சரணங்களிலுந்தான் இருக் கின்றன. பாடுகிறவர் சரியாய்ப் பாடினுல் இரண்டு சரணங்களில் எதை நிரவலுக்கு எடுத்துக்கொண்டா லும், சங்கராபரணத்தின் கம்பீர ஆனந்தம் முழுவதை யும் கொண்டு வரலாம். வித்தியாசம், உச்சரிக்கும் வார்த்தைகளைப் பற்றிய வரையில்தான். "கோரி வச்

சின வாரி கெல்லனு" என்பதைக் காட்டிலும் "ஸாம கான விநோதினி" என்பது ஓசை இன்பம் கொண்டதா, இல்லையா என்றுதான் கவனிக்கவேண்டும். டி. டி. கே. இந்த ஒரு விஷயத்திலாவது அவருடைய சங்கீத நண்பர்களை நம்பாமல் தமது சொந்தக் காதுகளை உபயோகித்தாரானால், நிச்சயமாக என் கருத்தை ஒத்துக்கொள்வார் என்பதில் சந்தேகமில்லை.

இன்னும், சங்கீதத்தை உள்ளபடி அநுபவிப்பதற்குக்கூட, அவர் 'சங்கீத ஞானம் உள்ள தமது நண்பர்களின் உதவியை நம்பாமலிருப்பது நலம் என்று தெரிவித்துக் கொள்கிறேன். இந்த 'சங்கீத ஞானி'கள் கச்சேரிகளில் நம் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு விட்டால், நம்மைச் சங்கீதம் கேட்கவிட மாட்டார்கள். பாடகர் பாடிக்கொண்டிருக்கும்போது இவர்கள் உரத்த சப்தத்துடன் நமக்கு ஸ்வரப்படுத்திக் காட்டுவார்கள். "அங்கே கொஞ்சம் காந்தாரம் பேசிவிட்டது" "இங்கே கொஞ்சம் நிஷாதம் இறங்கிவிட்டது" என்று சொல்லி நம் காதைத் தொளைப்பார்கள். தங்களிடம் கூழைக் கும்பிடு போட்ட பாடகர்களாயிருந்தால், அபஸ்வரம் பாடினாலும், "கேட்டீர்களா அந்த கமகத்தை!" என்பார்கள். தங்களுக்குப் பிடிக்காதவர்களுடைய பாட்டில் கமகம் பேசினால் "அந்த இடத்தில் அசைவு கொடுத்துவிட்டதே!" என்பார்கள். இன்னும், பாடும் வித்வான்களின் முக லட்சணத்தைப் பற்றியோ, அவ லட்சணத்தைப் பற்றியோ, ஓயாமல் பேசி நம் பிராணனை வாங்குவார்கள்.

இந்த மாதிரி 'சங்கீத ஞான' சிநேகிதர்களுடைய உதவியில்லாமல் டி. டி. கே. தாமாகவே சங்கீதம் கேட்கத் தொடங்கும்போது, 'ட்' 'த்' 'ப்' என்னும் எழுத்துக்கள் சம்பந்தமான கஷ்டமும் அவருக்கு நீங்கிப் போய்விடும். "பட்டி விடுவராது" "புட்டின நாடே" என்னும் வரிகளில் உள்ள 'ட்' எழுத்தைக் காலந் தவறாமல் நாக்கைப் புரட்டி உச்சரிக்க முடியுமென்றால், "கூட்டி" "ஊட்டி" "காட்டி" என்னும் வார்த்தைகளில் உள்ள "ட்" எழுத்தையும் உச்சரிக்க முடியுமென்பதை அவர் அறிந்து கொள்வார். "**கோர்கே ளொஸகே பிருதுகதா**" என்பதை உச்சரிக்கக்கூடிய நாக்கு.



"இன்னல் கூட்டி இன்பம் ஊட்டி
இந்திர ஜால வித்தை காட்டி"

என்பதை உச்சரிக்க முடியவில்லை யென்றால், அந்த நாக்கிலே ஏதோ பிசகே தவிரத் தமிழ் பாஷையில் இல்லை என்பதைக் காண்பார். இன்னும் நல்ல சங்கீதத்தை மேலும் மேலும் அவர் சுயமாகவே கேட்டுப் பழகி வருவாரானால், சங்கீதத்துடனே சாஹித்யத்தின் கருத்தையும் உணர்ந்து அநுபவிக்கவும், அர்த்த புஷ்டியுள்ள சாஹித்யத்தின் நிரவலில் "பகவானுடைய லீலா விபூதிகளை ஞானக் கண்ணால் பார்த்து அநுபவிக்கவும்" கூட வல்லவராகி விடுவார். ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் மனது வைத்து மட்டும் முயன்றாரானால், அவரால் ஆகாத காரியம் ஒன்று இருக்கக்கூடுமென்றே என்னால் நம்பமுடியாது.

# சங்கீத விழாக்கள்

1941-ம் வருஷத்தில் கேட்டை முட்டை, செவ்வாய்க்கிழமை எல்லாம் சங்கீத விழாவுக்குச் சேர்ந்து கொண்டன. ரங்கூனில் ஜப்பான் குண்டு போட்டது. செம்மங்குடியும் முசிரியும் கச்சேரி செய்ய முடியாமற் போனது. ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயரின் தமையனார் காலஞ் சென்றதின் காரணமாக அவர் சங்கீத விழாவில் அதிக கவனம் செலுத்தாமலிருந்தது—இவை எல்லாம் சேர்ந்து சங்கீத மகாநாட்டில் வழக்கமான உற்சாகம் இல்லாமல் அடித்துவிட்டன.

வருஷா வருஷம் மகாநாட்டின் திறப்பு விழா அன்று எள்ளுப்போட்டால் எள்ளு விழாதபடி ஜனங்கள் கூடியிருப்பது வழக்கம். இந்த வருஷத்தில் காலி நாற்காலிகள்தான் அதிகம் காணப்பட்டன. 'குரூப்' போட்டோ எடுத்த இடத்தில் மட்டும் வழக்கம்போல் கூட்டம் காணப்பட்டது குறிப்பிடத்தக்கது!

உலகத்தில் யுத்தக் கப்பல்கள்—வியாபாரக் கப்பல்களுக்கெல்லாம் எவ்வளவோ ஆபத்துகள் விளைந்து கொண்டிருந்தாலும், கர்நாடக சங்கிதக் கப்பலுக்கு மட்டும் எவ்வித அபாயமும் இல்லை யென்பதற்கு அறிகுறியாக மகாநாட்டைச் சிரமப்பட்டுத் திறந்துவைத்த பிட்டாபுரம் மகாராஜாவுக்கு சங்கீத வித்வத் சபையார் ஒரு வெள்ளிக் கப்பலைப் பரிசளித்ததும் பாராட்டத் தக்கதாயிருந்தது.



### ஆரம்பப் பிரசங்கங்கள்

சங்கீத மகாநாட்டின் திறப்பு விழாவில் முக்கியமாய்க் குறிப்பிடத்தக்க அம்சங்கள் இரண்டு இருந்தன:

1. மகாநாட்டின் தலைவர் ஸ்ரீ டி. வேங்கடசாமி நாயுடு அவர்களின் அக்கிராசனப் பிரசங்கம்.

2. ஸர் ஸி. வி. ராமன் அவர்களின் முடிவுரை.

'ஒண்ணே ஒண்ணு கண்ணேகண்ணு' என்பது போல், ஆந்திர தேசத்தில் இன்று ஒரே ஒரு உயர்ந்த சங்கீத வித்வானாக விளங்குகிறவர் ஸ்ரீ டி. வேங்கடசாமி நாயுடு. அவர் பிடில் வாசிப்பில் எவ்வளவு மதுர பாவத்தைக் கண்டிருக்கிறோமோ, அவ்வளவு அவருடைய அக்கிராசனப் பிரசங்கத்திலும் காணக்கூடியதாயிருந்தது.

ஆரம்பத்தில், எங்கும் நிறைநாதப் பிரம்மத்தைப் போற்றிப் பிரசங்கத்தை ஆரம்பித்தார். தியாகராஜர், தீக்ஷிதர், சாமா சாஸ்திரிகள் என்னும் சங்கீத மும்மூர்த்திகள் தோன்றாத் துணையாயிருந்து மகாநாட்டை நடத்துவிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தார். "நம் காலத்திய சிறந்த சாஹித்ய கர்த்தா பக்த சிரோமணி பாபநாசம் சிவ"னையும், சங்கீத ரத்னாகரம் ஸ்ரீ. அரியக்குடி ராமானுஜய்யங்காரையும், காலஞ்சென்ற ஸ்ரீ. கோடீசுவரய்யர், ஸ்ரீ. சுப்பிரமண்ய பாரதி இவர்களையும் பெயர் சொல்லிப் பாராட்டினார். பிறகு, கர்நாடக சங்கிதத்தின் அருமை பெருமைகளை வெகு நன்றாக எடுத்துக்கூறி, "சங்கீதம்—ஒரு யோக மார்க்கம்" என்று ஸ்தாபிதம் செய்தார்.

சங்கீத—ஸாஹித்ய—பாஷைச் சண்டைகளைப் பற்றியும் அவர் குறிப்பிடாமல் போகவில்லை.

"ஸாஹித்யத்துக்கு அவசியம் இல்லையென்றால், பின் கிருதிகள் என்பவை என்னத்திற்கு?" என்று கேட்டார். "சங்கீதத்தில் கிருதிக்கு இடம் உண்டு என்றால், பாட்டின் பொருள் தெரிந்திருக்க வேண்டியதும் அவசியமே. அப்போதுதான் பாவராக தாளங்களை நன்றாய் அறிந்து அனுபவிக்க முடியும்" என்றார். மேலே அவர் அழுத்தமாய்க் கூறியதாவது:—

**"சங்கீதத்துக்குத் தெலுங்கு எவ்வளவுதான் எடுத்ததாயிருந்தாலும், தமிழில் எவ்வளவுதான் உயர்ந்த பாட்டுக்கள் இருந்தாலும், அந்தந்த பாஷை தெரியாதவர்களுக்குப் பாட்டுக்கள் வெறும் பிதற்றலாகவே இருக்கும்."**

ஆகவே, தமிழ்ப் பாட்டு இயக்கத்தின் அடிப்படையான நோக்கத்தை ஸ்ரீ. வேங்கடசாமி நாயுடு பரிபூரணமாக ஒப்புக்கொண்டதாக ஏற்பட்டது.

மேலே அவர், "ஆந்திரர்களும் தமிழர்களும் பல விதத்திலும் ஒற்றுமைப்பட்டவர்களாயிருக்கிறோம். ஆதலின், இரண்டு பாஷைகளையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்" என்றார்.

இது மிகவும் பாராட்டத்தக்க விருப்பம் என்பதில் சந்தேகமில்லை. சென்ற இருபது வருஷ காலமாக நமது தலைவர் ராஜாஜி இதைச் சொல்லிக் கொண்டுதானிருக்கிறார். ஆனால் வேறு பாஷை கற்றுக் கொள்வதென்பது எல்லாருக்கும் சுலபமான காரியமில்லை. நூற்றுக்கு ஒருவர் இருவர்தான் சங்கீதாநுபவத்துக்காக வேறு



பாஷையைக் கற்க முடியும். மற்றவர்கள் எல்லாம் சொந்த பாஷையில்தான் சங்கீதத்தின் பூரண இன்பத்தை அநுபவிக்கலாம். இப்படிப்பட்டவர்களைப் பார்த்து, "தெலுங்கு கற்றுக்கொள்ளும் வரையில் உங்களுக்கு உயர்ந்த சங்கீதத்துக்கு உரிமையில்லை" என்று சொல்வது அநியாயமாகும்.

ஸர் ஸி. வி. ராமன், மகாநாட்டின் ஆரம்பக் கச்சேரியைச் செய்த ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்திக்குப் பரிசு கொடுப்பதற்காக வந்தவர், ஒரு அழகான பிரசங்கம் செய்தார். அதில், நம் நாட்டு ரஸிகர்கள் சங்கீதம் அநுபவிக்கும் முறைக்கும், மற்ற தேசத்தவர்கள் அநுபவிக்கும் முறைக்குமுள்ள வித்தியாசத்தை நன்றாக எடுத்துச்சொன்னார். "இன்று ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்தி நீலாம்பரி பாடியதுபோல் மேனாட்டுச் சபை ஒன்றில் பாடியிருந்தால், மண்டபம் இடியும்படியாகக் கரகோஷம் செய்திருப்பார்கள். நம் ஊரில் நாம் கையைக் கட்டிக்கொண்டு 'உம்' என்று உட்கார்ந்திருக்கிறோம். நல்ல சங்கீதத்தைப் பாராட்டிப் பாடகர்களை உற்சாகப்படுத்த நமக்குத் தெரிவதில்லை. மிருதங்கக்காரர் தபதபவென்று ஓங்கி அடிக்கும்போதுதான் நம்முடைய சபைகளில் கரகோஷமும் பலமாக உண்டாகிறது!" என்றார்.

ஸர் ஸி. வி. ராமன் உயர்ந்த சங்கீத ரஸிகர் என்பது பிரசித்தமான விஷயம். அவருடைய சங்கீத உற்சாகத்தைப் பலதடவைகளில் நான் கவனித்திருக்கிறேன். கச்சேரியில் ஒவ்வொரு பாட்டு முடிந்ததும் அவரால் கையைத் தட்டி ஆர்ப்பரிக்காமல் இருக்கவே முடியாது.

ஒரு தடவை கீர்த்தனத்தின் அநுபல்லவி முடிந்ததும், கீர்த்தனமே முடிந்ததாக நினைத்துக்கொண்டு அவர் பிரமாதமாகக் கரகோஷத்தை ஆரம்பித்துவிட்டார்! அவரைப் பின்பற்றி ஒருவரும் கையைத் தட்டாதது அவருக்கு ஆச்சரியத்தை விளைத்தது. பாடகர் கீர்த்தனத்தின் சரணத்தை ஆரம்பித்த பிறகுதான் அவருக்கு விஷயம் புரிந்தது.

நமது சங்கீத சபைகளில் காணப்படும் உற்சாகக் குறைவைப்பற்றி ஸர். ஸி. வி. ராமன் சொன்னதை ரஸிகர்கள் சிரத்தையுடன் கவனிக்கவேண்டும். இவ் விஷயத்தில் இரண்டு பக்கத்திலும் சொல்வதற்கு வாதங்கள் இருக்கின்றன. மேனாட்டு சங்கீதத்தைப் போல் நமது கர்நாடக சங்கீதம் உற்சாகத்தையும் கிளர்ச்சியையும் தருவதன்று. "சாந்தமுலேக சௌக்யமு லேது" என்னும் அஸ்திவாரத்தைக் கொண்டது நமது சங்கீதம். உள்ளத்தையும் ஊனையும் உருக்கிக் கண்ணீர் பெருகச் செய்வது நமது சங்கீதம். அத்தகைய ஆனந்தத்தை முகபாவத்திலும் தலையாட்டலிலும் காட்டத் தோன்றுமே தவிர, கரகோஷம் செய்வதற்கு சாதாரணமாகத் தோன்றுது. நமது கச்சேரிகளில் ஸ்வர யுத்தம் நடக்கும்போதும், மிருதங்கத்தை ஓங்கி அடிக்கும் போதும் தான் நமக்குக் கொஞ்சம் கிளர்ச்சி உண்டாகிறது; சத்தத்தோடு சத்தமாய் நாமும் கையைத் தட்டி வைக்கிறோம். ஆனல், வித்வான் எவ்வளவுக்கு எவ்வளவு அற்புதமாய்ப் பாடுகிறுரோ, அவ்வளவுக்கு நாம் "ஆஹா!" என்று சொன்னல்கூட இசை இன்பத்துக்குப் பங்கம் வரப்போகிறதே என்று பயந்துகொண்டிருக்கிறோம். ஆகவே, சபையோர் கையைத் தட்டி ஆர



வாரிக்காததினலேயே அவர்கள் சங்கீதத்தை நன்ருய் அநுபவிக்கவில்லை யென்று ஏற்படாது.

இதோடுகூட, நமது கச்சேரிகளில் பிடிக்காத அம்சம் நீண்டுகொண்டே போனல், அதை நிறுத்துவதற்கு 'அப்ளாஸ்' கொடுக்கும் வழக்கமும் ஒரு புறத்தில் ஏற்பட்டு வருகிறது. விஷயமறிந்த சில மிருதங்க வித்வான்கள் இப்போதெல்லாம் "எங்கே அப்ளாஸ் விழுந்து விடுமோ?" என்ற பீதியுடன் அவசர அவசரமாய்த் தனி ஆவர்த்தனம் வாசித்து முடித்துவிடுகிருர்கள். விஷயம் தெரியாத மிருதங்க வித்வான்களோ தங்களுடைய வாசிப்பைப் பாராட்டித்தான் 'அப்ளாஸ்' விழுகிறது என்று நினைத்துக்கொண்டு மேலும் பிரமாதமாக வாசிக்கிருர்கள்; அப்போது ஒரே ரகளையாகி விடுகிறது!

இப்படியெல்லாம் இருந்தபோதிலும், மொத்தத்தில் ஸர் ஸி. வி. ராமனுடைய கட்சியில்தான் அதிக நியாயம் இருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது. முன்னேயெல்லாம், சங்கீத வித்வான்களை நெருங்கிச் சூழ்ந்துகொண்டு, சங்கீத ரஸிகர்கள் கச்சேரிகளில் உட்காருவார்கள். அவர்களுடைய முகபாவங்களைப் பார்த்தும், "ஹாஹா" காரங்களைக் கேட்டும் வித்வான்கள் உற்சாகமடைய இடம் இருந்தது. இந்தக் காலத்திலோ, பாடகர் எங்கேயோ வெகுதூரத்தில் மேடையில் உட்காருகிருர். அவருக்கு எதிரே உட்காருகிறவர்களோ தலையை ஆட்டினல் கௌரவக் குறைவு என்று நினைக்கும் பெரிய மனிதர்களாகவும், ஓயாமல் வம்புக் கச்சேரி நடத்தும் 'கிரிடிக்'குகளாகவும் இருக்கிருர்கள். இவர்களைப் பார்த்துப் பாடகர்கள் உற்சாகமடையக் கொஞ்ச

மும் இடமில்லை. ஆகையால், சபையில் ரஸிகர்களா யிருப்பவர்கள் நன்ருயிருக்கும் இடங்களிலெல்லாம் சடசடவென்று கையைத் தட்டித் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்து விடுவதுதான் நல்லது என்று தோன்றுகிறது. இதனுல் சில சமயம் குரலின் இசை நயங்கள் மறைந்து போவதாயிருந்தாலும் மோசமில்லை. கரகோஷத்தினுல் வித்வானுக்கு ஏற்படக்கூடிய உற்சாகம் அதற்கு ஈடு செய்வதோடு, கச்சேரியே 'மவுஸ்' பெற்றுவிடும்.

# ஐயங்காரின் தமிழ்க் கச்சேரி

அரியக்குடி ராமானுஜய்யங்கார் கச்சேரி கேட்ப தற்காக அன்று எவ்வளவு ஆவலுடன் கோகலே மண்டபத்துக்குப் போனேனே அவ்வளவு ஆவலாக வேறெந்தக் கச்சேரிக்கும் நான் போனது கிடையாது.

"கச்சேரி அட்டவணையில் இவ்வளவு தமிழ்ப் பாட்டுக்களைப் போட்டிருக்கிருரே? கச்சேரி நன்ருய் அமையுமோ, என்னமோ? ஒருவேளை 'சப்' என்று இருந்தால், பழி தமிழின்மேல் அல்லவா விழும்?" என்று கொஞ்சம் கவலையாகவுமிருந்தது.

மண்டபத்துக்குள் நான் நுழைந்தபோது ஐயங்கார் தமிழ்க் கடவுளாகிய முருகனை வருந்தி அழைத்துக் கொண்டிருந்தார். "முத்துக் குமரய்யனே!" என்று திரும்பத் திரும்பக் கூப்பிட்டார். குரல் கம்மலின்றிக் கணீரென்று ஒலித்துக் கொண்டிருந்தது. நல்ல நாதக் கட்டும் தாளக்கட்டும் பொருந்தி, பாட்டு ஜம்மென்று இருந்தது. "இன்றைக்குக் கச்சேரி அமர்க்களந்தான்" என்று தீர்மானித்துக்கொண்டு விட்டேன்.

இரண்டொரு தெலுங்குக் கீர்த்தனங்களுக்குப் பின்னர் ஐயங்கார் யதுகுல காம்போதி ராகத்தைத் தேனினைசயாகப் பொழிந்துவிட்டு, "காலைத் தூக்கி நின்ருடும் தெய்வமே" என்னும் கீர்த்தனத்தைப் பாடினுர். "வேலைத் தூக்கும் பிள்ளைதனைப் பெற்ற தெய்வமே!" என்ற அநுபல்லவியை எடுத்தபோது,

சபையில் சொல்லி வைத்ததுபோல் "ஹாஹாகாரம்" எழுந்தது. சரணத்தில் ஒவ்வொரு அடியையும் பாடும் போது சிவபெருமானுடைய திவ்ய ஸ்வரூபம் கேட்பவர்களின் கண் முன்னே தோன்றியது. இன்று ஐயங்கார் தமிழ் வார்த்தைகளை அநுபவித்து உச்சரித்த விதமே ரொம்ப மேலாயிருந்தது. நிரவல், ஸ்வரம் எல்லாம் விஸ்தாரமாகப் பாடி முடித்தபோது, "தமிழில் உயர்ந்த பாட்டுக்கள் இல்லை" என்று சொல்லுவோரை நினைத்து இரக்கப்பட வேண்டியதாயிற்று.

மோகனராக ஆலாபனமும் "ஏன் பள்ளிகொண்டீரய்யா?" என்ற கீர்த்தனமும் ஸ்ரீ ரங்கநாதரே எழுந்து உட்கார்ந்து அநுபவிக்கும்படி இருந்தது என்று சொல்லவேண்டும்.

பிறகு, தன்யாசி ராகத்தில் ஸ்ரீதேவியின் மேல் நெரூர் ஸ்ரீநிவாஸாச்சாரியாரின் ஒரு புதுத் தமிழ்க் கீர்த்தனையைப் பாடியதுடன் கச்சேரியின் முதல் பாகம் முடிந்தது.

புரோகிராமில் ராக ஆலாபனத்துக்குக் காம்போதி போட்டிருந்தது. இது விஷயமாக ஐயங்கார் சபையோரின் அபிப்பிராயத்தைக் கலந்துகொள்ள விரும்பி, "அகாடமி கச்சேரியிலும் காம்போதி ராகம் பாடினேன். இங்கேயும் காம்போதி போட்டிருக்கிறது. காம்போதியே பாடட்டுமா? வேறு ராகம் பாடட்டுமா?" என்று கேட்டார்.

ஐயங்கார் இவ்விதம் சபையின் அபிப்பிராயத்துக்கு மதிப்புக் கொடுத்துக் கேட்டது எனக்குப் பரம திருப்தியளித்தது. அதைவிடச் சபையோரின் பதில் அளவிலாத மகிழ்ச்சி தந்தது. "காம்போதியே பாடுங்கள்" என்று பல பக்கங்களிலிருந்தும் குரல்கள் வந்தன. "அகாடமி கச்சேரியின் பேச்சை இங்கே ஏன் எடுக்கிறீர்கள்? இன்றைக்குக் காம்போதி பாடினால் அது வேறு தினுசாய்த்தான் இருக்கும்" என்று சொல்வது போலிருந்தது.



உண்மையில் இங்கே ஐயங்கார் பாடிய காம்போதி பிரமாதமான காம்போதியா யிருந்தது. ஸர் ஸி. வி. ராமன் சொன்னதுபோல், "சங்கீதத்தை அநுபவித்து விடமாட்டோம்" என்று கையை இறுகக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தவர்கள் கூட, அடிக்கடி கையைத்தட்டி ஆர்ப்பரிக்கும்படி ஆகிவிட்டது.

தமிழிலேயே பல்லவியும் பாடிய பிறகு, ஐயங்கார் "எத்தனை விதங்கள் தான்" என்னும் தமிழ்ப் பாடலை ராக மாலிகையில் வெகு அழகாய்ப் பாடினார். "தீராத விளையாட்டுப் பிள்ளை" முதலிய இன்னும் சில தமிழ்ப் பாட்டுக்களும் பாடிச் சபையோரின் ஆரவாரமான உற்சாகத்துக் கிடையில் கச்சேரியை முடித்தார்.

பக்க வாத்தியங்களில், பிடில் வாசித்த ஸ்ரீ துவாரம் வேங்கடசாமி நாயுடு சிறந்த வித்வான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அவருடைய கையில் வலிவு இவ்வளவு தூரம் குறைந்து விட்டதே என்று அடிக்கடி எண்ணம் உண்டாயிற்று. இதைத் தெரிந்துகொண்டு தானோ என்னமோ "அப்படி யொன்றுமில்லை; என் கையில் வலிவு இருக்கிறது" என்று சொல்வதுபோல், ஸ்ரீ வேங்கடசாமி நாயுடு ஒரு தடவை வில்லை அமுத்திப் போட்டார்; பிடிலின் தந்தி படீரென்று அறுந்து விழுந்

தது! பிறகு வேறு பிடிலை எடுத்துக்கொண்டு, விட்ட இடத்தில் ஆரம்பித்தார்.

அன்று ஐயங்காரின் பாட்டு பாலக்காட்டு மணிக்கே மிகுந்த உற்சாகத்தை உண்டாக்கியிருக்க வேண்டும். வழக்கம்போல் நெடுகிலும் பாட்டுடன் ஒத்து அழகாக வாசித்தவுடன், வழக்கமில்லாத வழக்க மாகத் தனி ஆவர்த்தனமே நெடு நேரம் வாசித்துச் சபையோரை மகிழ்வித்தார்.

27-ந் தேதி ஐயங்கார் ஸெனட் மண்டபத்தில் செய்த கச்சேரியையும் நான் கேட்டேன். அது ரொம்ப சுமாரராய்த்தா னிருந்தது. கோகலே ஹால் கச்சேரியோ "அபாரம்" "அற்புதம்" என்றெல்லாம் சொல்லும்படி யிருந்தது. பக்க வாத்தியம் வாசித்த வர்கள் இரண்டு இடங்களிலும் ஒரே ஆசாமிகள் தான். பின் வித்தியாசத்துக்குக் காரணம் என்?

ஐயங்காரின் மன நிலையில் உள்ள வித்தியாசந் தான் காரணமா யிருக்கவேண்டும்.

என்னதான் வாதப் பிரதி வாதங்கள் நடந்த போதிலும், சங்கீத விஷயத்தில் தமிழ் நாட்டுப் பொது ஜனங்களின் அபிப்பிராயம் இன்னதென்பது தெளி வாய்த் தெரிந்திருக்கிறது.

"தமிழ் நாட்டில் நடக்கும் சங்கீதக் கச்சேரிகளில் தமிழ்ப் பாட்டுக்களை அதிகமாகப் பாடவேண்டும்" என்பதுதான் அந்த அபிப்பிராயம்.

ஐயங்கார் அவர்களுக்குப் பொதுஜன அபிப்பிரா யத்தில் ரொம்பவும் மதிப்பு உண்டு என்பது நான் நிச்சயமாய் அறிந்த விஷயம். "அதை யனுசரித்துக் கச்சேரி செய்கிறோம்" என்ற எண்ணம் ஐயங்காருக்கு மிகவும் உற்சாகத்தை யளித்திருக்க வேண்டும். கலை என்னும் பயிருக்கு உற்சாகந்தான் வான மழை அல்லவா? எனவே, மனதில் பூரண உற்சாக மிருக்கும் போது கச்சேரி அமர்க்களமா யிருப்பதற்குக் கேட்கவா வேண்டும்?



* * *

இந்தக் கச்சேரிக்கு முதல் நாள் ஐயங்கார் சங்கீத மகாநாட்டில் செய்த பிரசங்கத்தைப் பற்றி இந்த இடத் தில் குறிப்பிடுவது பொருத்தமா யிருக்குமென்று நம்பு கிறேன். தினசரிப் பத்திரிகைகளில் படித்த விவரத்தி லிருந்து இந்தப் பிரசங்கத்தின் மொத்த முடிவாக எனக் குப்பட்டது இதுதான் :—

ஐயங்கார் வெகுகாலமாகவே—அதாவது இந்தத் தமிழிசைக் கிளர்ச்சிக்கு ரொம்ப நாள் முன்னுலிருந்தே— தமிழ்க் கீர்த்தனங்களைப் பாடி வந்திருக்கிறார்; இன்னும் மேலும் மேலும் அதிகமாகப் பாடப் போகிறார் என்பதே.

"பருத்தி புடவையாய்க் காய்த்தது" போல் சந் தோஷப்பட வேண்டிய விஷயம் இது. தமிழிசைக் கிளர்ச்சியை உத்தேசித்து அல்லாமல் ஐயங்கார் தமது சொந்த விருப்பத்தினுலேயே தமிழ்ப் பாட்டுக்கள் அதிகம் பாடினார் என்றால், இன்னும் விசேஷமே தவிர வேறொன்றுமில்லை. தமிழ்ப் பாட்டுக்கு ஆதரவான கிளர்ச்சியையோ எதிரான கிளர்ச்சியையோ சிறிதும் பொருட்படுத்தாமல், ஐயங்கார் மேலும் மேலும் தமிழ்ப் பாட்டுக்களை அதிகம் பாடித் தமிழ் மக்களை மகிழ்விக்க வேண்டுமென்பதுதான் நமது கோரிக்கை.

இதற்குமேல், ஐயங்கார் சந்தேகப்பட்டுப் பிரஸ்தாபித்திருக்கும் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்.

"நமது பெரியவர்களில் பலர் தமிழில் ஸாஹித்யம் செய்யாமல் வேறு பாஷைகளில் செய்திருக்கிறார்களே; அதன் காரணம் இன்னதென்பது எனக்குத் தெரியவில்லை" என்று ஐயங்கார் சொல்லியிருக்கிறார்.

அதன் காரணம் எதுவாயிருந்தபோதிலும், அதிலிருந்து "தமிழ் சங்கீதத்துக்கு எடுத்த பாஷையில்லை" என்று ஏற்படாது என்பதை நான் வற்புறுத்த விரும்புகிறேன்.

இந்தக் காலத்துப் பெரியார்களில் பலர் சமீபகாலம் வரையில் பொதுக் கூட்டங்களில் தமிழில் பேசாமல் இங்கிலீஷில் பேசி வந்தார்களே, அது ஏன்? இதிலிருந்து, தமிழ் பாஷை பொதுக்கூட்டங்களில் பேசுவதற்கு லாயக்கில்லாத பாஷையென்று நாம் முடிவு கட்டுவது சரியாயிருக்குமா?

இன்றைய தினங்கூட, நமது சங்கீத வித்வத் சபை விழாக்களில், இங்கிலீஷ் எதற்காகப் பிரதம ஸ்தானம் வகிக்கிறது? பிட்டாபுரம் மகாராஜாவும், ஆசிரியர் வேங்கடசாமி நாயுடுவும் எதற்காக இங்கிலீஷில் தங்கள் முன்னுரைப் பிரசங்கங்களைச் செய்ய வேண்டும்?

உண்மையில், வித்வத் சபைக் காரியங்கள் இங்கிலீஷில் நடப்பதென்பது கொஞ்சமும் பொருத்தமில்லாத விஷயந்தான். அரியக்குடி ராமானுஜய்யங்காருக்கும், செம்மங்குடி சீனிவாசய்யருக்கும், பிடில் ராஜமாணிக்கம் பிள்ளைக்கும், பாலக்காட்டு மணிக்கும் தெரியாத பாஷையில் சங்கீதத்தைப் பற்றிய பேச்சுக்கள் நடப்பதென்பது அபத்தத்திலும் அபத்தம் என்றுதான் சொல்ல வேண்டும்.



ஆனால், அப்படிப்பட்ட காரியங்கள் ஏன் நடக்கின்றன? ஸ்ரீ வேங்கடசாமி நாயுடு தெலுங்கில் பேசி, அதன் தமிழ் மொழி பெயர்ப்பை அச்சிட்டுக் கொடுத்திருந்தால், நன்றாயிருந்திராதா?

இந்தக் காலத்துப் பெரியவர்கள் இங்கிலீஷில் பேசுவது போல்தான், அந்தக் காலத்துப் பெரியவர்களில் சிலரும் தெலுங்கில் ஸாஹித்யம் செய்திருக்கிறார்கள்; வேறொன்றுமில்லை.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தெலுங்கராகையால், தெலுங்கில் கீர்த்தனங்கள் செய்தார். அந்த மகான் தெலுங்கில் கீர்த்தனம் செய்த காரணத்தால் அதை ஒரு சம்பிரதாயமாகக் கொண்டு அவருக்குப் பின்னால் வந்த தமிழர்கள் சிலரும் தெலுங்கில் ஸாஹித்யம் செய்தார்கள்.

சங்கீத மகாநாட்டில் ஆசிரியர் வேங்கடசாமி நாயுடுவின் பிரசங்கம் இங்கிலீஷில் இருந்ததைக்கொண்டு, கர்நாடக சங்கீதத்தைப் பற்றிப் பேசுவதற்கு எடுத்த பாஷை இங்கிலீஷ்தான் என்றும், தெலுங்கிலும் தமிழிலும் சங்கீதப் பேச்சே பேச முடியாதென்றும் தீர்மானித்துவிடக் கூடாதல்லவா?

அது போலவே, நமது பெரியவர்கள் சிலர் தெலுங்கில் ஸாஹித்யம் செய்ததைக் கொண்டே, தமிழ்பாஷை சங்கீதத்துக்கு உகந்ததில்லையென்று தீர்மானித்துவிடக் கூடாது.

தமிழ் இசையை வளர்ப்பதற்கு இரண்டு முக்கிய மான வழிகள் இருக்கின்றன.

(1) ஏற்கெனவே தமிழ்ப் பாட்டுக்களையே பாடிக் கச்சேரி செய்துவரும் ஸ்ரீ தண்டபாணி தேசிகர் போன்ற வர்களை ஆதரித்து ஊக்க மூட்டுவது.

(2) இதுவரை அதிகமாய்த் தெலுங்குக் கிருதி களையே பாடிவரும் நமது பிரபல வித்வான்களை மேலும் மேலும் தமிழ்ப் பாட்டுக்களை அதிகம் பாடச் செய்வது.

இந்த இரண்டாவது வழி தமிழிசை வளர்ச்சிக்கு ரொம்பவும் முக்கியமானது என்பது என்னுடைய நம்பிக்கை. இந்த நோக்கம் நிறைவேற வேண்டுமானால், இன்று கர்நாடக சங்கீத உலகில் முதன்மை ஸ்தானம் வகிக்கும் அரியக்குடி ராமானுஜய்யங்கார்தான் வழி காட்டவேண்டும். அய்யங்கார் அவர்கள் அம்மாதிரி வழி காட்டுவார் என்று எனக்கிருந்த நம்பிக்கையை அவர் கோகலே மண்டபக் கச்சேரியில் உறுதிப்படுத்தி யிருக்கிறார். ரொம்ப ரொம்ப சந்தோஷம்.



# திறப்பு விழாக்கள்

சென்னை நகரின் சமூக வாழ்க்கையில் டிசம்பர் கடைசியில் நடக்கும் சங்கீத விழாக்கள் மிகுந்த முக்கி யத்தை அடைந்திருக்கின்றன. இந்த விழாக்களைத் திறந்துவைப்பதற்குச் சங்கீதம் தெரியாத பிரமுகர்களை ஒவ்வொரு வருஷமும் அழைப்பதும் வழக்கமா யிருந்து வருகிறது. இந்தத் திறப்பு விழாக்களை நடத்துகிறவர்கள் சாதாரணமாக "எனக்குச் சங்கீதத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது" என்று அவையடக்கம் சொல்லிக்கொண்டு தான் ஆரம்பிக்கிற வழக்கம். ஆனால் இந்த வருஷம் மியூஸிக் அகாடமி விழாவைத் திறந்துவைத்த ஸர் எம். வெங்கட சுப்பராவைப்போல் அவ்வளவு அழகாக யாருமே தங்கள் பிரசங்கத்தை ஆரம்பித்ததில்லை. முதல் வாக்கியத்திலேயே இவர் தம்மை 'இக்னரமஸ்' என்று தெரிவித்துக்கொண்டார். 'இக்னரமஸ்' என்னும் அழகிய கம்பீரமான வார்த்தைக்குத் தமிழில் சரியான பிரதிபதம் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. ஆங்கிலமும் தமிழும் நன்கறிந்த சில நண்பர்களைக் கேட்டுப் பார்த் தேன். அவர்கள், "அஞ்ஞான இருள் குன்று" "மௌடீக மலை" "மட சாம்பிராணி" முதலிய சொற்றொடர்களைக் கூறினார்களே தவிர, 'இக்னரமஸ்' என்பதைப்போல் கம்பீரமான தனிப்பதம் ஒன்றைக் குறிப்பிட முடியவில்லை. இது ஒருபுற மிருக்க.

ஸர் வெங்கட சுப்பராவ் தம்மைச் சங்கீத விஷயங் களில் 'இக்னரமஸ்' என்று கூறிக்கொண்டது எவ்வளவு

சத்தியமான வார்த்தை என்பதை அவருடைய பேச்சின் கடைசிப் பகுதியில் நிரூபித்துவிட்டார். தமக்குக் கொஞ்சமும் தெரியாத விஷயத்தைப்பற்றி வேறு யாரோ சொல்லிக் கொண்டிருந்ததை ஒப்புவித்தார். தமிழ்ப் பாட்டு இயக்கத்தை வெளுத்து வாங்கினர். ''கலையில் அரசியலைக்கொண்டு வரலாமா?'' என்று கேட்டார். ''இத்தனை நாளும் நீங்கள் தெலுங்குப் பாட்டுக்களையே தான் கேட்டுக்கொண்டு வந்தீர்கள்? இப்போது தமிழ்ப் பாட்டு என்ன வந்தது கேடு?'' என்ருர். ''திராவிட பாஷைகளுக்குள் தெலுங்குதான் இனிமையானது'' என்னும் பழைய பெயர்போன அபத்தத்தைத் திருப்பிச் சொன்னர். ''தமிழ்ப் பாட்டு வேணுமானல் தேவாரம்–திருவாசகம் இருக்கிறதே? வேறு என்னத்துக்கு?'' என்று கேடடார். இன்னும், ''இம்மாதிரி பயங்கர மர்ம இயக்கங்களினல் ஜெர்மனி எத்தகைய கேட்டை அடைந்தது தெரியுமா?'' என்று மயிர்க் கூச்செறியக் கேட்டுத் தமிழிசைக்காரர்கள் எல்லாம் ஒரு வேளை ஹிட்லர் கோஷ்டியைச் சேர்ந்தவர்களோ என்ற சந்தேகத்தை உண்டாக்கினர். ''நல்ல வேளையாக, இந்தத் தமிழிசை இயக்கம் தமிழ் மக்களுடைய இருதயத்தையோ, தமிழ்ப் பாடகர்களையோ கவரவில்லையென்று அறிகிறேன். ரொம்பத் திருப்தி; பரிபூரண சந்தோஷம். ஆனலும் ஜாக்கிரதையா யிருககவேண்டும். தமிழிசையாகிய பேரபாயத்தை அடியோடு வெறுக்காத வரையில் நிம்மதியாகத் தூங்க முடியாது'' என்ருர்.

மூன்று நிமிஷத்துக்குள் இவ்வளவு அபத்தங்களையும் இல்லாத காரியங்களையும், அசட்டு வாதங்களையும் சொல்லக் கூடியவருக்கு 'இக்னரமஸ்' என்ற பட்டம் தகுதியில்லையென்ருல், வேறு யாருக்குத்தான் தகுதியாயிருக்க முடியும்?



தமிழிசை இயக்கத்தின் பைத்தியக்காரத்தனத்தை நன்கு எடுத்துக் காட்டும் பொருட்டு, மியூஸிக் அகாடமியார் 1941-ம் வருஷத்தில் ஒரு ஆந்திரரை விழாவைத் திறப்பதற்கும், இன்னொரு ஆந்திரரை மகாநாட்டில் அக்கிராசனம் வகிக்கவும் தேர்ந்தெடுத்தார்கள். ஆனல் அவர்கள் இருவரும் அகாடமியை ஏமாற்றி, ''சங்கீதத்தில் பாஷை முக்கியமானதுதான்; தெரிந்த பாஷையில் பாடுவதுதான் விசேஷம்'' என்று சொல்லிவிட்டார்கள்.

இந்த வருஷத்து அகாடமி விழாவைத் திறந்து வைத்த ஸர் வெங்கடசுப்பராவ் அகாடமிக்காரர்களின் நோக்கத்தை நன்கு நிறைவேற்றி விட்டார். சொல்லிக் கொடுத்த பாடத்தை அப்படியே ஒப்புவித்து விட்டார்.

ஆனல், அகாடமியாரின் துரதிர்ஷ்டமும், தமிழ் நாட்டின் நல்லதிர்ஷ்டமும், சங்கீத தேவதையின் நல்ல காலமும் சேர்ந்து, இந்த வருஷத்து மகாநாட்டுக்கு மழவராய நேந்தல் சுப்பராம பாகவதர் அக்கிராசனராக வரும்படி நேர்ந்தது. ஸர் எம். வெங்கட சுப்பராவின் அபத்தங்களுக்கு வேறு யாரும் பதில் சொல்வதற்கு அவசியமே இல்லாதபடி பாகவதர் தமது அக்கிராசனப் பிரசங்கத்தில் பதில் சொல்லிவிட்டார்.

(1) ''தமிழ் சங்கீதத்துக்கு உகந்த பாஷையில்லை;'' (2) ''தமிழில் உயர்ந்த சாஹித்யங்கள் இல்லை;'' (3) ''தமிழிசை இயக்கத்துக்குத் தமிழ்நாட்டில் ஆதரவு இல்லை'' என்னும் மூன்று கூற்றுக்களும் அபத்தம் என்

பதைச் சங்கீத வித்வத் சபையின் அக்கிராசனர் எவ்வளவு தெளிவாக எடுத்துச் சொல்கிறார், கேளுங்கள்:

**"இன்னும் நம் தமிழ் நாட்டின் தாய்ப் பாஷையாகிய அமிழ்தினுமினிய தமிழ் மொழியில் நம் முன்னோர்களான ஸ்ரீ சமயாசாரியான், ஸ்ரீ முத்துத் தாண்டவர், ஸ்ரீ அருணாசலக் கவி, திருவிளையாடல் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதிகள், ஸ்ரீ கவி குஞ்சர பாரதிகள், ஸ்ரீ சிதம்பர பாரதிகள், ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதிகள், ஆகியோர் பக்தி பரவசத்தோடு ஆயிரக் கணக்கான பண்களும், கீர்த்தனங்களும், பதங்களும் தேனொழுகப் பாடியுள்ளார்கள். அவற்றில் தெலுங்கு முதலான பாஷைகளிலுள்ள பெரியவாளின் கீர்த்தனங்களைப் போலவே அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கு உகந்தவாறு ராகம், பாவம், தாளம்ஆகிய சிறந்த அம்சங்கள் விசேஷமாய்ப் பொருந்தி யிருப்பதைக் காணலாம். ஆகையால் தமிழ்ப் பெரியோரின் கீர்த்தனங்களையும் ஸங்கீத வித்வான்கள் கையாளவேண்டும் என்பது என் அபிப்பிராயம்."**

பெரிய பரம்பரையில் வந்தவர் மகா வித்வான் ஸ்ரீ சுப்பராம பாகவதர். "இந்த நாளில் உள்ள வித்வான்களுக்குள்ளே சங்கீதக் கலையின் சகல அம்சங்களையும் பூரணமாய் அறிந்தவர் இவர் ஒருவர்தான்" என்று ஸ்ரீ பொன்னையாப் பிள்ளை இவரை மகாநாட்டுத் தலைமைக்குப் பிரேரேபிக்கும்போது கூறினார். அத்தகையவர் தமிழில் "**ஆயிரக்கணக்கான பண்களும், கீர்த்தனங்களும், பதங்களும் இருக்கின்றன**" என்று கூறுகிறார். 'இக்னொரமஸ்' ஸர். வெங்கடசுப்பராவும் அவருக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்தவர்களும், "தமிழில் தேவாரம் திருவாசகந்தான் இருக்கின்றன; கீர்த்தனம் இல்லை" என்கிறார்கள். யார் பேச்சை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நாம் அறிவோம். ஸர் வெங்கட சுப்பராவின் சொல்லிக் கொடுக்கப்பட்ட பேச்சுக்கு மறுநாள் கோகலே ஹாலிலும் பதில் சொல்லப்பட்டது. இங்கே பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடியாரின் சங்கீத விழாவை ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் ஆரம்பித்து வைத்தார். ராஜா ஸர் அவர்களை இந்த விழாவை ஆரம்பிக்க அழைத்ததே ஸர். எம். வெங்கடசுப்பராவுக்கு ஒரு தக்க பதில் என்று சொல்லலாம். ராஜா ஸர் அவர்கள் தமிழிசை இயக்கத்துடன் கலந்தவர் என்பது சகலருக்கும் தெரியும். பெரிய மனுஷராதலால் இந்த இயக்கமே அவரால் ஆரம்பிக்கப்பட்டு அவரால் நடந்து வருவதாகத் தவறாய் நினைப்பவர்களும் இருக்கிறார்கள். அத்தகையவரை பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடியார் திறப்புவிழா நடத்த அழைத்தார்கள் என்றால், தமிழிசை இயக்கம் தமிழ் நாட்டில் வேரூன்றி விட்டதென்பதற்கு வேறு அத்தாட்சி வேண்டியதில்லை. அகாடமியாரும், அவர்கள் தேடிப்பிடிக்கும் 'இக்னொரமஸ்'களும் கண்ணை மூடிக் கொண்டால் உலகம் அஸ்தமித்து விடாது என்பதற்கும் இது அறிகுறியாகும்.

ராஜா ஸர் அவர்கள் தன் பிரசங்கத்தில் தமிழ் இசை இயக்கத்தின் நோக்கத்தைத் தெளிவாக எடுத்துக் கூறினார். தமிழிசை இயக்கம் உண்மையில் சங்கீத வளர்ச்சி இயக்கந்தான் என்பதை எடுத்துக் காட்டினார். தமிழ் நாட்டில் தமிழர்கள் தமிழ்ப் பாட்டுக்களை விரும்புவது இயற்கை என்றும், அதற்கு விரோதமாகப் பேசுவது இயற்கைக்கு விரோதம் என்றும் கூறி, மகாகனம் சாஸ்திரியார், ராஜாஜி, தாகூர் ஆகியவர்களின் கூற்றுக்களிலிருந்து அத்தாட்சியும் எடுத்துக் காட்டினார்.

ராஜா ஸர் அவர்களின் பேச்சில் ஒரு விஷயம் மிகவும் முக்கியமானது. பாடகர் பாடகிகளை அவர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாகத் தமிழிசைக்காரர்கள் தமிழ்ப்பாட்டுப் பாடச்சொல்கிறார்கள் என்று தமிழ் இசை விரோதிகள் புகார் சொல்கிறார்கள். உண்மை இதற்கு நேர்மாறானது என்று ராஜா ஸர் எடுத்துக் காட்டினார்.

**"சங்கீத சபைகளின் நிகழ்ச்சி முறையை நோக்கினால் தாய்மொழி யல்லாத பிறமொழிப் பாடல்களையே பாட வேண்டுமென்று பாடகர்கள் பாடகிகள் வற்புறுத்தப் படுகிறார்கள் என்பது சொல்லாமலே விளங்கும்"**

இவ்விதம் ராஜா ஸர் சொல்வது முற்றிலும் உண்மை என்பதை நிரூபிக்கப் பல அத்தாட்சிகள் சமீபத்தில் கிடைத்திருக்கின்றன.

தமிழ்ப் பாட்டு இயக்கம் ரஸிகர்களின் ஆதரவை எவ்வளவுதூரம் பெற்றுவிட்டது என்பதை நிரூபிக்க இன்னொரு சிறந்த அத்தாட்சி கோகலே ஹாலில் அன்று மாலையே கிடைத்தது. திறப்பு விழாவுக்குப் பிறகு நடந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரியைத் தான் குறிப்பிடுகிறேன். ஸ்ரீமதி எம். எஸ். எத்தனையோ கச்சேரிகள் செய்திருக்கிறார்கள்; கோகலே ஹாலிலும் எத்தனையோ கச்சேரிகள் நடந்திருக்கின்றன. ஆனால் இதற்கு முன் எம். எஸ். இம்மாதிரி கச்சேரி செய்ததில்லை, கோகலே ஹாலிலும் இம்மாதிரி கச்சேரி நடந்ததில்லை யென்று சொல்லவேண்டும். பெரும்பான்மையாகத் தமிழ்ப்பாட்டுக்கள்தான் பாடினார். பந்துவராளி, ஆபோஹி, சங்கராபரண ராகங்களில் இசைப்



பிரவாகம் பெருக்கெடுத்து ஓடிற்று. அந்த ராகங்களில் "நின்னருள்", "சபாபதிக்கு", "தூக்கிய திருவடி" என்னும் கீர்த்தனங்கள் ஒவ்வொரு ரஸிகருடைய உள்ளத்தையும் துள்ளும்படிச் செய்தன. முதற் பகுதியில் கடைசிக் கீர்த்தனமாக,

"காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே என்னைக்
கைதூக்கி ஆள் தெய்வமே"

என்று மத்தியம சுருதியில் எடுத்தபோது சபையில் நிச்சப்தம் ஏற்பட்டது. "இங்கும் அங்குமாய்த் தேடி" என்னும் இடத்தில் பலருக்கும் பரவசம் உண்டாயிற்று; சிலருடைய கண்ணில் ஜலம் வந்துவிட்டது. கீர்த்தனம் முடிந்ததும், எள்ளுப் போட்டால் எள்ளு விழாதபடி கூடியிருந்தவர்கள் அவ்வளவு பேரும் ஏகமனதாகக் கரகோஷம் செய்து மண்டபம் இடிந்து விழுமோ என்ற சந்தேகத்தை உண்டாக்கி விட்டார்கள். இத்தகைய பரவச நிலைமை, பின்னால் "கண்ணா என்று நான் கதறிடும் போதினில்" என்ற இடத்திலும் ஏற்பட்டது.

# கிளிப்பிள்ளை ஆட்சேபம்

தமிழ் இசை இயக்கம் பற்றி எனக்கு வந்த கடிதங்களில் ஒரே ஒரு கடிதந்தான் நமது அபிப்பிராயத்தை ஆட்சேபித்தது.

ஆட்சேபனைக் கடிதத்தை எழுதியிருப்பவர் மேட்டூர் பெண்மணி ஒருவர். இப் பெண்மணி எடுத்துக் கொண்டிருக்கும் சிரத்தையைப் பெரிதும் பாராட்டுகின்றேன். ஆனால் விஷயத்தை மட்டும் அவர் சரியாக உணர்ந்துகொள்ளவில்லை. உதாரணத்துக்கு, இதைக் கேளுங்கள் :—

**"இந்தத் தமிழ் இசை இயக்கம் தமிழ் இசையை வளர்ப்பதைக் காட்டிலும் தெலுங்கு பாஷை துவேஷத்தை வளர்ப்பதில் அதிக ஆர்வமுடையதாய்த் தோன்றுகிறது."**

**"தற்சமயம் இந்தியாவில் இருக்கும் ஜாதி மத துவேஷங்கள் போதாதென்று தமிழ் இசைப் பிரியர்கள் பாஷை துவேஷத்தை வேறு கிளப்பி விட்டிருக்கிறார்கள்."**

எப்படி இருக்கிறது கதை? விடிய விடிய இராமாயணம் கேட்டுவிட்டுச் 'சிதைக்கு ராமர் சித்தப்பா' என்பது போல் இருக்கிறதோ இல்லையோ?

மேற்படி துவேஷக் குற்றச் சாட்டுக்கு எத்தனையோ தடவை பதில் சொல்லியாகிவிட்டது.

நமது பள்ளிக்கூடங்களில் எல்லாப் பாடங்களையும் தாய்ப் பாஷையிலேயே சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று சொன்னால் அது துவேஷமா?



நமது பொதுக் கூட்டங்களில் பிரசங்கிகள் தமிழில் பேசவேண்டுமென்று சொன்னால் அது துவேஷமா?

இதெல்லாம் பாஷைத் துவேஷம் இல்லையென்றால், "தமிழில் பாடவேண்டும்" என்று சொல்வது மட்டும் எப்படித் துவேஷமாகும்? இன்னும் கேளுங்கள் :—

**"ஹிந்தி படிப்பதினால் தமிழ் மொழிக்குத் தீங்கு ஏற்படாது என்ற அபிப்பிராயத்தை உடைய நீங்கள் தெலுங்குப் பாட்டுக்களே பாடக் கூடாது என்பது ஆச்சரியமாயிருக்கிறது."**

"ஹிந்தி உபமானத்தை இந்தச் சகோதரி கொண்டு வந்ததுபற்றி மகிழ்ச்சி யடைகிறேன்.

ஹிந்தி படிப்பதினால் தமிழ் மொழிக்குத் தீங்கு ஏற்படாது என்பதுதான் என் அபிப்பிராயம். அதில் கொஞ்சங்கூடச் சந்தேகமே யில்லை.

ஆனால் நமது பள்ளிக்கூடங்களில் எல்லாப் பாடங்களும் ஹிந்தியிலே சொல்லிக் கொடுக்கப்பட வேண்டும். நமது பொதுக்கூட்டங்களில் பிரசங்கிகள் ஹிந்தியிலேயே பேசவேண்டும். நமது கச்சேரிகளில் ஹிந்தியிலேயே பாடவேண்டும் என்று ஏற்பட்டால், அதனால் நிச்சயமாகத் தமிழ் மொழிக்குத் தீங்கு ஏற்படத்தான் செய்யும். தமிழ் மொழிக்கு மட்டுமல்ல; தமிழ் மக்களின் மனோநலம், ஆத்மநலம் எல்லாவற்றுக்குமே அளவற்ற தீங்கு ஏற்படும்.

அப்படிப்பட்ட ஏற்பாட்டை யாராவது கொண்டு வந்தால் நிச்சயம் நான் எதிர்ப்பேன்.

அதே காரணத்தினால் தான் நமது சங்கீதக் கச்சேரிகள் முழுமையும் அன்னிய பாஷை மயமா யிருப்பதை நான் எதிர்க்கிறேன்.

தெலுங்குப் பாட்டுக்களே பாடக்கூடாது என்று நான் சொல்லவில்லை. (நான் சொல்லாததை வைத்துக் கொண்டு இந்தச் சகோதரி ஆச்சரியப்படுவதே ஓர் ஆச்சரியந்தான் !) தமிழ்ப் பாட்டுக்கள் பெரும்பாலும் பாட வேண்டுமென்றுதான் சொல்லுகிறேன்.

திருச்சி ரேடியோவைப் பொறுத்தவரையில், அது தமிழ் நிலையம் என்று சொல்லப் படுவது உண்மையானல், அதில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கச்சேரியிலும் தமிழ்ப் பாட்டுக்களே பெரும்பாலும் இருக்க வேண்டும்.

மாதக் கணக்கும், வருஷக் கணக்கும் பார்ப்பதில் பிரயோஜனமில்லை.

* * *

கடைசியாக மேட்டூர் சகோதரியின் கடிதத்தில் முக்கியமான பகுதிக்கு வருகிறேன் :—

**"திருச்சி ரேடியோ நிலையத்தைக் கண்டித்து எழுதின நீங்கள் அந்தக் கட்டுரையில் கர்நாடக சங்கீதத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூட எழுதவில்லை... திருச்சி நிலையம் 'கர்நாடக சங்கீத வளர்ச்சிக்காகப் பாடுபடுகிறதா, இல்லையா ?' என்ற விஷயம் உங்கள் கவனத்திற்கு வரவேயில்லை என்று தெரிகிறது"**

கர்நாடக சங்கீதத்துக்குச் சென்னை ரேடியோ செய்துவரும் தொண்டைப்பற்றி எழுதியதில் திருச்சி ரேடியோவும் அடங்கியிருப்பது இவருடைய கவனத்துக்கு வரவில்லைபோலிருக்கிறது. போனல்போகட்டும்.



ரேடியோ நிலையங்கள் கர்நாடக சங்கீதத்துக்குத் தொண்டு செய்வதாகவே வைத்துக்கொள்வோம். தமிழ் ரேடியோ நிலையம் அந்தத் தொண்டைத் தமிழ்ப் பாட்டுக்களின் மூலமாகச் செய்ய வேண்டுமென்று சொல்வதில் என்ன ஆட்சேபம் ?

**கர்நாடக சங்கீதத்துக்கும் தமிழ்ப் பாட்டுக்கும் ஏதாவது ஜன்ம விரோதமா ?**

**அம்மாதிரி விரோதம் இருப்பது போலத் தமிழ்ப் பாட்டு இயக்கத்தின் எதிரிகள் பேசுகிருர்கள் ; எழுதுகிருர்கள்.**

**இவர்கள்தான் "கச்சேரியில் பல்லவிக்குப் பின்னல் தமிழ்ப் பாட்டுப் பாடலாம்—முன்னல் பாடக்கூடாது" என்று அபத்தப் பிரச்சாரம் செய்கிறவர்கள்.**

**இதற்கு அர்த்தம் என்னவென்ருல், கர்நாடக சங்கீதத்தின் பெருமையை நாட்டக் கூடிய தமிழ்க் கீர்த்தனங்கள் இல்லை என்பதுதான்.**

**இப்படிச் சொல்வது ஆழ்ந்த அறியாமையையோ, பொய்யான குருட்டுத் தனத்தையோதான் காட்டுகிறது.**

கர்நாடக சங்கீதத்தின் சிறப்பை நாட்டக்கூடிய ஆயிரக்கணக்கான தமிழ்க் கீர்த்தனங்கள் இருக்கத்தான் இருக்கின்றன. பழைய கீர்த்தனங்கள் ஒருபுறமிருக்க, இதோ நம் காலத்திலேயே அத்தகைய தமிழ்க் கீர்த்தனங்கள் எத்தனையோ வெளியாகிக் கொண்டிருக்கின்றன.

கொண்டாடப்பட வேண்டுமென்பது எனது கோரிக்கை '' என்று சொல்லியிருக்கிறார் !

ஆகவே, தமிழ்ப் பாட்டு இயக்கம் கர்நாடக சங்கீதத்தைக் கெடுத்துவிடும் என்றோ, பல்லவிக்கு முன்னால் பாடக்கூடிய தமிழ்க் கீர்த்தனங்கள் இல்லை என்றோ யாராவது சொன்னால், அது ''சுத்த அபத்தமான வாதம்'' என்று பதில் சொல்வதற்கு யாரும் தயங்கவேண்டியதில்லை.

நல்ல தமிழ்க் கீர்த்தனங்கள் போதிய அளவு இல்லையென்ற காரணமும் பிரயோஜனப்படாது.

இதே சாஹித்ய கர்த்தா மொத்தம் 120 வர்ணங்களும், 72 மேளகர்த்தா ராக கீர்த்தனைகளும், பஞ்சரத்தினக் கீர்த்தனைகளும், இன்னும் பற்பல ராகங்களில் சுமார் ஆயிரம் கீர்த்தனைகளும் தமிழ மொழியில் பாடியிருப்பதாக ஸ்ரீ டி. வி. சுப்பராவ் அவர்களே தமது முகவுரையில் தெரிவித்திருக்கிறார்.

''புதிய தமிழ்க் கீர்த்தனைகளைப் பாடம் செய்வதற்கும், பாடிப் பழகுவதற்கும், அவகாசம் வேண்டும்'' என்று வேணுமானால் காரணம் சொல்லுங்கள்.

''தமிழில் உயர்ந்த கீர்த்தனைகள் இல்லை'' ''தமிழ்ப் பாட்டுப் பாடினால் கர்நாடக சங்கீதம் போய்விடும்'' என்னும் கிளிப்பிள்ளை வாதங்களை மட்டும் தயவுசெய்து சொல்லவேண்டாம் !

# தாய்மொழிப் பகைமை

தாயையும், தாய்நாட்டையும், தாய் மொழியையும் போற்றுவது மனித இயற்கை. தமிழர்கள் தங்கள் தாய்மொழியைப் போற்றிய விதம் அபூர்வமானது. பரமசிவனே தமிழ்மொழியை அளித்ததாகச் சொல்லி, தாய்மொழிக்குத் தெய்வத் தன்மையையே அளித்தார்கள். அகஸ்தியரைப் பற்றிக் கூறும்போது,

''தழற்புரைச் சுடர்க் கடவுள்
தந்த தமிழ் தந்தான்''

என்றார் கம்பர்.

இப்படியெல்லாம் தாய்மொழியைப் போற்றிய தமிழகத்தில் இக்காலத்தில் பிறந்துள்ள சில அபூர்வப் பிறவிகள் தாய்மொழியைத் துவேஷிக்கிறார்கள். அவர்களுடைய துவேஷம் பலவிதமாக உருக்கொள்கிறது. ''தமிழ் மொழி சங்கீதத்துக்கு உகந்ததல்ல'' என்று ஒரு ஆந்திரர் வந்து சொல்லும்போது, இந்த ஜன்மங்கள் சந்தோஷப்பட்டு ஆரவாரிக்கின்றன ! ''தமிழில் நல்ல பாட்டு இல்லை'' என்று நாக் கூசாமல் சொல்கின்றன. ''தமிழ்ப்பாட்டுப் பாடினால் கர்நாடக சங்கீதத்தின் தரம் குறைந்துவிடும்'' என்று எழுதுகின்றன.

இதற்கெல்லாம் எவ்வளவோ பேர், எவ்வளவோ தெளிவாக, எத்தனையோ தடவை பதில் சொல்லியாகி விட்டது. ஆனால் ஜன்மாந்தர பாவத்தினால் ஏற்பட்ட தாய்ப் பாஷைத் துவேஷமானது அடியோடு அறிவை

முடிவிடுவதால், சூரன் தலைகளைப்போல் மேற்படி வாதங்களைத் திருப்பித் திருப்பிச் சொல்லி வருகிறார்கள்.

இந்த அபத்தப் பிதற்றல்களுக்கெல்லாம் இந்த வருஷத்துச் சங்கீத வித்வத்சபை அக்கிராசனர், **மழவராய நேந்தல் சுப்பராம பாகவதர்** அதிகாரபூர்வமாகப் பதில் சொல்லியிருக்கிறார் :

**"நம் தமிழ் நாட்டின் தாய்மொழியாகிய அமிழ்தினுமினிய தமிழ் மொழியில் ஆயிரக்கணக்கான பண்களும், கீர்த்தனங்களும், பதங்களும், தேனொழுகப் பாடியுள்ளார்கள்...... தமிழ்ப் பெரியாரின் கீர்த்தனங்களையும் சங்கீத வித்வான்கள் கையாளவேண்டும் என்பது என் அபிப்பிராயம்"** என்றுகூறியிருக்கிறார்.

சரி; தமிழிசை இயக்கத்தின் நோக்கமென்ன? மேற்படி "ஆயிரக்கணக்கான பண்கள், கீர்த்தனங்கள், பதங்கள்" இவற்றையெல்லாம் வெளிக்கொணர்ந்து சங்கீத வித்வான்கள் அதிகமாகக் கையாளச் செய்ய வேண்டு மென்பதுதான்.

மழவராய நேந்தல் பாகவதர் சொல்கிறபடித் தெலுங்கிலும் நல்ல ஸாஹித்யங்கள் இருக்கின்றன, தமிழிலும் இருக்கின்றன என்று வைத்துக்கொண்டு பார்ப்போம். தெலுங்கில் உள்ள நல்ல ஸாஹித்யங்களை ஏற்கெனவே எல்லா வித்வான்களும் நிறையக் கையாளுகிறார்கள்; யதேஷ்டமாகப் பாடுகிறார்கள். தமிழ் ஸாகித்யங்களைத் தான் பாடுவதில்லை. ஸ்ரீ சுப்பராம பாகவதர் பல அபூர்வத் தமிழ்ப்பாட்டுக்களைப் பாடிக் காட்டினாராம். அந்தப் பாட்டுக்களைக் கச்சேரி வித்வான்கள் கச்சேரிகளில் கையாளுகிறார்களா? இல்லை. ஆகவே, தமிழ்



ஸாஹித்யங்களைக் கையாளச் செய்வதற்குத்தான் விசேஷ முயற்சி தேவை யென்பதைத் தாய்ப்பாஷைத் துவேஷிகள் தவிர வேறு யாராவது மறுக்க முடியுமா?

தமிழிசை முயற்சியினால் சங்கீதத்தின் தரம் குறைந்து போய்விடுமென்று சில துவேஷ ஜன்மங்கள் சொல்கின்றன. சங்கீதத்தின் தரம் எப்படிக் குறையும்? சங்கீதம் எப்படி யிருந்தாலும் பாதகமில்லை; தமிழ்ப் பாட்டுப் பாடினால் போதும்" என்று தமிழிசைக்காரர்கள் சொல்கிறார்களா? அப்படிச் சொல்வதா யிருந்தால், சங்கீத வித்வான்களிடமும் சங்கீதச் சபைகளிடமும் வர வேண்டிய அவசியமே இல்லையே? வித்வத் சபைகளில் வித்வான்கள் பாடவேண்டும், அதுவும் பல்லவிக்கு முன்னால் கீர்த்தனங்களாகப் பாடவேண்டும் என்று கேட்பதெல்லாம் எதற்காக? சங்கீதத்தின் தரம் கொஞ்சமும் குறையாமல் தமிழிசையை வளர்க்கவேண்டும் என்ற நோக்கத்தினாலேயே அல்லவா?

தாய்ப் பாஷையில் பாடுவதனால் சங்கீதத்தின் தரம் ஒருநாளும் குறையாது. தெரியாத அன்னிய பாஷைகளிலேயே பாடி வந்ததனால்தான் சங்கீதத்தின் தரம் குறைந்து போயிருக்கிறது. இதனால்தான் சாஹித்யக் கொலைகள் நடக்கின்றன. பாட்டில் பாவம் என்னும் அம்சமே இல்லாமல் போயிருக்கிறது.

தாய்ப்பாஷைக் கீர்த்தனங்களை அதிகமாகக் கையாளக் கையாள மேற்படி குறைகள் எல்லாம் நீங்கி கர்நாடக சங்கீதம் இன்னும் மேலான நிலைமையைத் தான் அடையும்.

# சண்டை என்னத்திற்கு?

சமீபத்தில் ஒரு சங்கீத வித்வானைச் சந்தித்தேன்.

"என்ன விசேஷம்?" என்று சாதாரணமாய்க் கேட்டேன்.

"ஊரெல்லாம் காலராவும் காபராவுமாய்க் கிடக்கிறது" என்றார்.

"அடடா! அதனால் சங்கீதக் கச்சேரிகளுக்கு விக்கினம் உண்டோ?" என்று கேட்டேன்.

"கச்சேரிகளுக்கு விக்கினம் வந்தால் பாதகமில்லை. தியாகராஜ ஸ்வாமி உற்சவத்துக்கல்லவா விக்கினம் வந்துவிட்டது?"

"அப்படியா? திருவையாற்றில் இந்த வருஷம் உற்சவம்.........?"

"நடக்கிறது; ஆனால், வழக்கம்போல் ஐந்து தினங்கள் விமரிசையாக நடக்கவில்லை. ஒருநாள் உற்சவம் நடத்தத்தான் அனுமதி கிடைத்தது."

"இந்தமட்டும் ஒரு நாளாவது நடக்கிறதே!"

"ஆமாம்; இதுகூட நடக்காவிட்டால் வித்வான்களுக்கு மனம் இடிந்துவிடும்."

"ஒரு விஷயம் உங்களைக் கேட்க வேணுமென்றிருந்தேன். கர்நாடக சங்கீத உலகில் எத்தனையோ சாஹித்ய கர்த்தாக்கள் இருந்திருக்கிறார்களே? தியாகராஜ ஸ்வாமிகளிடம் மட்டும் வித்வான்களுக்கு இவ்வ



ளவு பக்தி சிரத்தை ஏன்? அவருடைய ஆராதன உற்சவத்தில் இவ்வளவு ஊக்கம் ஏன் காட்டுகிறார்கள்?" என்றேன்.

"இது தெரியாதா? தியாகராஜ ஸ்வாமிகளின் ஸாஹித்யங்களைத்தானே நாங்கள் ரொம்ப அதிகமாகச் சின்னாபின்னப் படுத்துகிறோம்! அதற்குப் பரிகாரமாக வருஷம் ஒரு தடவை திருவையாற்றில் ஸ்வாமிகளின் சமாதிக்கு உற்சவம் நடத்துகிறோம்" என்று நகைச்சுவையுடன் கூறினார் வித்வான்.

**ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள்** மகான்; மகா பக்திமான். சித்த புருஷர். கர்நாடக சங்கீதத்துக்கு ஒப்பற்ற சேவையைச் செய்தவர். நவநவமான மெட்டுக்களில், அபூர்வமான ராக தாளங்களை அற்புதமான ஸாஹித்யங்களைச் செய்திருக்கிறார். அந்த ஸாகித்யங்களைத் தமிழ் நாட்டுச் சங்கீத வித்வான்கள் வெகு காலமாகக் கையாண்டு, பெயரும் புகழும் அடைந்திருக்கிறார்கள்.

அத்தகைய தியாகராஜ ஸ்வாமிகளிடம் நமது வித்வான்கள் பக்திகொண்டிருப்பது இயற்கை.

* * *

மகா கனம் சாஸ்திரியார் சமீபத்தில் "அரசியலில் சாந்தி" என்னும் விஷயத்தைப்பற்றி ஓர் உபந்நியாசம் செய்தார். அதைப்பற்றி நான் இங்கு ஆராய்ச்சி செய்ய வரவில்லை. சாஸ்திரியாரைப்போல் வேறு சிலர் "சங்கீதத்தில் சாந்தி"யைப்பற்றி உபதேசிக்கிறார்களே, அதை நாம் கவனிக்க வேண்டியது அவசியம். "சங்கீதத்தில் சண்டை என்னத்திற்கு?" என்று இந்த சாத்வீக ஆத்மாக்கள் கேட்கிறார்

கள், 'சண்டை' என்னும் போது, இவர்கள் தமிழ இசை இயக்கத்தைத்தான் குறிப்பிடுகிறார்கள். ஆகவே, சண்டையைக் கிளப்பும் பொறுப்பு முழுவதையும் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் மேலேயே போட்டுவிடு கிறார்கள்! (இந்த ஸீஸனுக்கு மேற்படி சண்டையைக் கிளப்பியவர் ஸர் வேங்கடசுப்பராவ் என்பதைக் கூட சௌகரியமாக மறந்து விடுகிறார்கள்! இவர்கள்தான் மறக்கிறார்களோ, அல்லது இவர்களுடைய பிரசங் கத்தை வெளியிடும் பத்திரிகைக்காரர்கள்தான் மறைக் கிறார்களோ, தெரியவில்லை.)

"சண்டை"யைக் கிளப்பியது தமிழ் இசை இயக் கம் என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் "சண்டை" எது ?

"தமிழ்ப் பாட்டுப் பாடவேண்டும்" என்று சொல் வது சண்டையா ?

இது சண்டையென்றால், இந்தச் சண்டையைத் தமிழர்கள் போட்டுத்தான் ஆகவேண்டும்.

ஆனால், உண்மையில் "தமிழ்ப் பாட்டுப் பாட வேண்டும்" என்பது சண்டையில்லை. அதைச் சண்டை என்பதாக எந்த சங்கீத வித்வானும் சொல்லவில்லை.

"**தமிழ்ப்பாட்டு பாடக் கூடாது**" என்று சிலர் கட்சி கட்டுவதுதான் உண்மையில் சண்டை. அதற்குக் காரணமாக அவர்கள் "தமிழ் சங்கீதத்துக்கு உகந்த பாஷை இல்லை" "தமிழில் நல்ல ஸாஹித்யம் இல்லை" "தமிழ்ப் பாடடுப் பாடினால் கர்நாடக சங்கீதத்தின்



தரம் குறைந்து விடும்" என்றெல்லாம் சொல்லும் போதுதான் சண்டை வலுக்கிறது.

இம்மாதிரியான அவதூறுகளை—தாய்மொழி துவே ஷப் பிரசாரத்தை—எந்தத் தமிழன்தான் கேட்டுக் கொண்டு 'சாந்த'மா யிருக்க முடியும்? அப்படிக் கேட் டுக் கொண்டிருப்பவனைத் "தமிழன்" என்றோ, "தமிழ்பாஷைக் குரியவன்" என்றோ சொல்ல முடியுமா ?

மேற்படி "சாந்தி"க் கட்சியைச் சேர்ந்த வர்கள் இன்னொன்று சொல்கிறார்கள். "தமிழ்ப் பாட்டுப் பாடவேண்டியதுதான். வேண்டாமென்று சொல்லவில்லை. அதற்காகத் **தியாகராஜர், தீக்ஷிதர்** முதலியவர்கள் அளித்திருக்கும் ஸாஹித்யச் செல்வங் களைக் கைவிட்டுவிட முடியாது" என்கிறார்கள்.

தியாகராஜரையும், தீக்ஷிதரையும் தள்ளிவிட வேண்டுமென்று யார் சொல்கிறார்கள்? தமிழிசைக்கா ரர் யாரும் இதுவரையில் சொல்லவில்லை. பின் இல் லாத அபாயத்தை இவர்கள் ஏன் வருவித்துக்கொண்டு அவஸ்தைப் படுகிறார்கள் ?

தமிழிசை இயக்கத்தினால் தியாகராஜருக்கும் தீக்ஷிதருக்கும் ஆபத்து வந்து விடுமா ?

ஒரு உதாரணம் பார்க்கலாம்.

நாலு வருஷத்துக்கு முன்னால் **ஸ்வாதித் திருநாள்** என்ற பெயரையே ரொம்பப் பேர் கேட்டிருக்க மாட்டார்கள். திருவாங்கூர் சமஸ்தானத்துக்குத் திடீரென்று சங்கீதப் பிரேமை உண்டாயிற்று. தங்கள்

முதாதையான ஸ்வாதித் திருநாளின் கீர்த்தனங்களைப் பிரபலப்படுத்த வேண்டுமென்று தீர்மானித்தார்கள். தமிழ்நாட்டின் பிரபல சங்கீத வித்வான்கள் பலர் திருவாங்கூர் சமஸ்தான வித்வான்கள் ஆனார்கள். தற்சமயம் ஸ்வாதித் திருநாள் கீர்த்தனம் பாடாத வித்வான் அருமையென்று சொல்ல வேண்டும். சென்ற 1941-ம் வருஷத்து அகாடமி புரோகிராமைப் பார்த்தால், ஒரு வித்வான் மூன்று ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்கள் பாடியிருக்கிறார் என்பது தெரியவரும்.

இப்படித் திடீரென்று இரண்டு மூன்று வருஷங்களில் ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்கள் பிரபலமானபடியால் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி, தீக்ஷிதர் இவர்களுடைய மகிமைக்கு ஏதாவது குறைவு வந்து விட்டதா ?

ஸ்வாதித் திருநாள் கீர்த்தனைகளினால் தியாகராஜர், தீக்ஷிதர் மகிமை குறைவுபட வில்லையென்றால், தமிழ்க் கீர்த்தனைகளைப் பாடுவதினால் மட்டும் எவ்விதம் குறைவுபடும் ?

" சாந்தி " உபதேசக்காரர்களில் சிலர் இன்னும் ஒரு விசித்திர வாதத்தையும் சொல்கிறார்கள். " சங்கீதத்துக்குப் பாஷை எதற்கு ? சங்கீதமே ஒரு தனி பாஷை அல்லவா ?" என்கிறார்கள். உடனே, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வேணுகானம் செய்தபோது ஆடு, மாடு, மரம், மட்டை, புல், பூண்டு, கல்லு, முள்ளு எல்லாம் கண்ணீர் விட்டுக் கதறியதை எடுத்துக் காட்டுகிறார்கள்.



இந்த வாதத்தைச் சொல்கிறவர்களை, சங்கீதத்தைப் பொறுத்த வரையில், மரம் மட்டைகளோடு சேர்த்து விடுவதைத் தவிர வேறு வழியில்லை. ஏனெனில், இவர்கள் சங்கீதத்துக்கு ஸாஹித்யமே வேண்டியதில்லை யென்கிறார்கள். இவர்களுக்குத் தியாகராஜர், தீக்ஷிதர், ஸ்வாதித் திருநாள், முத்துத் தாண்டவர் ஒருவருமே தேவையில்லை.

ஆனால், நாமெல்லாரும் அத்தகைய பக்குவ நிலையை அடையவில்லை. ஸ்ரீ கிருஷ்ணபகவான் நேரில் வந்து மரம் மட்டையெல்லாம் உருகும்படி புல்லாங்குழல் வாசிக்கிறவரையில், நமக்குச் சங்கீதானந்தத்தைப் பூரணமாய் அநுபவிப்பதற்கு ஸாஹித்யமும் வேண்டித்தான் இருக்கிறது. ஸாஹித்யத்தின் தேவை ஏற்படும்போது, தமிழ் ஸாஹித்யத்துக்கும் இடங்கொடுங்கள் என்றுதான் சொல்கிறோம்.

உண்மை என்னவென்றால், தமிழ் இசையை எதிர்ப்பவர்கள் முன்னுக்குப் பின் முரணாக எல்லாவிதமான வாதங்களையும் உபயோகப்படுத்துகிறார்கள். எல்லா வாதங்களுக்கும் அடிப்படை தமிழ் மொழியின் மேல் உள்ள பகை அல்லது அலட்சியமாகத்தான் இருக்கும்.

தமிழ் மக்கள் இதை எப்படிச் சகித்துக் கொண்டு " சண்டை வேண்டாம் " என்று சரந்தமாய் இருக்க முடியும் ?

# பெரிய முயற்சி

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களா? 'அழகிய மணவாள தாஸர்' என்றும் பெயருண்டு. சுமார் எழுநூறு வருஷங்களுக்கு முன்பு தமிழ் நாட்டில் வாழ்ந்தவர். 'திருவரங்கக் கலம்பகம்' முதலிய அஷ்டப் பிரபந்தங்களை இயற்றிய வைஷ்ணவப் பெரியார்.

திருவரங்க க்ஷேத்திரத்தில் அறிதுயில் அமர்ந்திருக்கும் ஸ்ரீரங்கநாதரின் தோள்கள் ஒரு சமயம் பூரித்து உயர்ந்தன என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் கூறுகிறார். அதன் காரணம் இன்னதென்பதையும் தெரியப்படுத்துகிறார். கேளுங்கள்:

**அருமறைதுணிந்த பொருள்முடிவை இன்சொல்**
**அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பி**
**அருளியசடகோபர் சொல்பெற் றுயர்ந்தன**
**அரவணை விரும்பி அறிதுயில் அமர்ந்த**
**அணிதிரு வரங்கர் மணிதிகழ் முகுந்தர்**
**அழகியமணவாளர் கொற்றப்புயங்களே!**

அதாவது, சடகோபர் என்னும் நம்மாழ்வாரின் **அமுதொழுகுகின்ற இனிய தமிழ்ச் சொற்களைக்** கேட்ட ஆனந்தத்தினால் ஸ்ரீரங்கநாதரின் புஜங்கள் பூரித்து உயர்ந்தனவாம்!

தமிழ்மொழியின் இனிமையை இப்படியெல்லாம் நமது முன்னோர்கள் போற்றிப் புகழ்ந்தார்கள்.

"**தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்**"



என்று சைவப் பெரியார் கூறி, தமிழுக்கும் இசைக்கும் உள்ள பொருத்தத்தை ஆணி அடித்துக் கூறினார். அத்தகைய அமுதொழுகுகின்ற இன்பத் தமிழ்மொழியானது சங்கீதத்துக்குப் பொருத்தமற்றது என்று இக்காலத்தில் சிலர் சொல்லுகிறார்கள். வெறுமனே விவகாரத்துக்காகச் சொல்லுவதோடு நிற்கவில்லை. இந்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு சங்கீத சபைகளில் நிகழ்ச்சித் திட்டங்களை அமைக்கிறார்கள். பிறபாஷைப் பாட்டுக்கள்தான் அதிகம் இருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். தமிழைக் கச்சேரி முடிவுக்குத் தள்ளி ஒதுக்குகிறார்கள்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டு தாய்மொழியில் அன்புள்ள தமிழ் மக்கள் சும்மா இருக்க முடியாது என்று சொல்லியிருந்தோம். அவர்களுக்கு ஆத்திரம் உண்டாகத்தான் செய்யும். ஆனால், வெறும் ஆத்திரத்தோடு முடிந்துவிட்டால் என்ன பிரயோஜனம்? யாருக்குப் பிரீதி? ஆத்திரம் காரியமாக உருக்கொள்ள வேண்டும். தமிழோடு இசையை வளர்ப்பதற்குப் பெருமுயற்சி நடக்கவேண்டும்.

கட்டாயம் நடக்கவேண்டியதுதான். தமிழிசையை வளர்ப்பதற்கு ஒரு பெரிய முயற்சி நடந்து வருகிறதென்பதைக் கேட்டுத் தமிழன்பர்களும் இசையன்பர்களும் குதூகலம் அடைவார்கள் என்று நம்புகிறேன்.

முக்கியமாக ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களும், ஸர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்களும் இந்தப் பெரு முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். தமிழ்நாடு முழுவதிலுமுள்ள பல பெரிய மனிதர்கள்.

கள் இந்த முயற்சிக்குப் பெருந்தொகைகள் நன்கொடை யளித்திருக்கிறார்கள்.

எப்பேர்ப்பட்ட தீமையிலும் ஒரு நன்மைக்கு வித்து இருக்கும் என்று சொல்வதுண்டு. அதுபோல் ஸர் எம். வேங்கடசுப்பராவின் ஆத்திரமூட்டும் பேச்சும், மியூஸிக் அகாடமியின் தமிழ் துவேஷமும் இந்தப் பெரிய முயற்சிக்கு ஆதாரமாக இருந்திருக்கின்றன. ஆகவே, ஸர் எம். வேங்கட சுப்பராவுக்கும், மியூஸிக் அகாடமிக்கும் தமிழ் மக்கள் வந்தனம் செலுத்த வேண்டியதுதான்.

"பணம் வசூலாகியிருக்கிறது" என்று கேட்டதும், சில பிரகஸ்பதிகள் கிளம்பி, "ஓஹோ! பணத்தைக் கொண்டு சங்கீதத்தை உற்பத்திசெய்ய முடியுமா?" என்று கூறிப் புன்னகை புரிவார்கள். இப்படிக் கேட்பதற்கு பிரகஸ்பதிகள்தான் வேண்டுமென்பதில்லை. "பணத்தைக்கொண்டு, சங்கீதம் உற்பத்தி செய்ய முடியாது; ஸாஹித்யமும் உற்பத்தி செய்ய முடியாது" என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. ஆனால், பணத்தைக்கொண்டு சங்கீதத்துக்கு ஆதரவு அளிக்கலாம் என்பதும் தெரிந்த விஷயந்தான். கலைகளின் வளர்ச்சிக்குக் கலைஞர்களின் மேதை எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவர்களுக்கு ஆதரவு அளிப்பதும் அவசியமாகும்.

மேலும், ஒரு விஷயத்தில் உண்மையான சிரத்தையும் ஊக்கமும் எவ்வளவு இருக்கிறதென்பதைக் காட்டுவதற்குப் பணம் ஒரு அளவுகோலாயிருக்கிறது. தமிழ்நாட்டுப் பெரிய மனிதர்களில் பலர் பத்தாயிரம் ரூபாய், ஐயாயிரம் ரூபாய் தமிழிசை வளர்ச்சிக்குக் கொடுத்திருக்கிறார்கள் என்றால், இது விஷயத்தில் அவர்கள் எவ்வளவு சிரத்தையும் ஆத்திரமும் கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு அதை அறிகுறியாகக் கொள்ள வேண்டும்.



எனவே செட்டிநாட்டு ராஜாவும் ஸர் ஆர். கே. ஷண்முகமும் தொடங்கியிருக்கும் இந்தப் பெருமுயற்சி பெரிதும் பாராட்டுதற் குரியதாகும். அவர்களுடைய முயற்சி நெடுகிலும் நல்லமுறையில் நடந்து பரிபூரண வெற்றியடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். தமிழ்நாடெங்கும் தமிழிசை முழங்கப்போகும் காலத்தை மிகவும் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

# தமிழிசையும் பிராமணர்களும்

நமது நாட்டிற்கு ஏதோ ஒரு சாபக்கேடு இருக்க வேண்டும். இதனால்தான் எந்த நல்ல காரியத்தை எடுத்தாலும், சாதிப் பிரச்னையானது ஏதாவது ஒரு உருவத்தில் வந்து அதில் குடிபுகுந்து விடுகிறது.

நமக்கு வந்த கடிதம் ஒன்றில் ஓர் அன்பர் இந்தப் பிரச்னையைக் கிளப்பியிருந்தார். "தமிழர்கள் என்றால் பிராமண ரல்லாதார்கள்" என்றும், "தமிழிசை இயக்கம் பிராமண ரல்லாதாரின் இயக்கம்" என்றும் சிலர் கருதுவதைப் பற்றி அவர் எழுதியிருந்தார்.

பிராமணர்களைத் துவேஷிக்கும் சுயமரியாதைப் பிரச்சாரகர்கள் இம்மாதிரி பிரச்சாரம் செய்தால், அதில் வியப்புறுவதற்கு இடமிராது.

ஆனால், கர்நாடக சங்கீதத்தைக் காப்பாற்றுவதற்காகக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் பிராமணர்கள் சிலரும் இம்மாதிரி பிரச்சாரம் செய்து வருவது தற்கொலைக்கு ஒப்பான செயலே யாகும்.

"தமிழ் மக்கள்" என்றால், பிராமணர்கள்உள்பட வீட்டில் தமிழ் பேசும் எல்லாருந்தான் என்பதைப் பல தடவை வற்புறுத்தியிருக்கிறது.

இதற்கு மாறாக, ஒரு பிராமணன் "நான் தமிழன் இல்லை; தமிழ் மகன் இல்லை" என்று கூறிக் கொண்டால், அதைப்போல் மடமை வேறொன்றும் இருக்க முடியாது. "பிராமணர்கள் அன்னியர்கள்; தமிழ்



நாட்டின் பொது வாழ்வில் அவர்களுக்கு இடமில்லை" என்று சொல்லும் சுயமரியாதைப் பிரசாரகர்களின் கட்சியை அது ஒப்புக்கொள்வதாகும். "தமிழ் மக்கள்" "தமிழர்கள்" என்று குறிப்பிடும்போது, தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட எல்லாரையும் சேர்த்தே சொல்லப்படுகிறது. தெலுங்கு பேசுகிறவர்களை, "ஆந்திரர்கள்" என்றும், வங்காளி பேசுகிறவர்களை "வங்காளிகள்" என்றும் சொல்லுவதைப் போலவே தமிழ் பேசுகிறவர்களைத் தமிழர்கள் என்கிறோம்.

இனி, "தமிழிசை இயக்கம் பிராமணரல்லாதார் இயக்கமா?" என்று பார்ப்போம்.

அதைப் பிராமணரல்லாதார் இயக்கமாகவே ஆக்கிவிடச் சுயமரியாதைக்காரர்கள் விரும்பலாம். பிராமணர்களில் குறுகிய மனமுள்ளவர்கள் சிலரும் இதற்கு ஒத்துப்பாடி "ஆம்; தமிழிசை பிராமணரல்லாதாரின் இயக்கந்தான்!" என்று சொல்லலாம்.

ஆனால், உண்மையில் தமிழிசை இயக்கம் பிராமண ரல்லாதாரின் இயக்கம் அல்ல.—அது **தமிழ் மக்களின் இயக்கம்.**

தமிழ் இசையில் பிராமணருக்குச் சொந்தமில்லாமல் பிராமண ரல்லாதாருக்கு மட்டும் தனிச் சொந்தமானது எது? தமிழா? இசையா?

தமிழிலும், இசையிலும் பிராமணர்களுக்கு உரிமை யில்லையா? அவர்களுக்கு அந்த உரிமை வேண்டாமா?

அகஸ்தியர், தொல்காப்பியர் காலம் முதல், நேற்று மகா மகோபாத்தியாயர், பாரதியார் வரையில் எவ்

8

வளவோ பிராமணர்கள் தமிழுக்குத் தொண்டு செய்து வந்திருக்கிறார்கள்.

அத்தகைய தமிழை "எங்களுக்கு வேண்டாம்!" என்று இன்றையப் பிராமணர்கள் சொல்லிவிடப் போகிறார்களா?

இன்னும், ஆழ்வார்கள் நாயன்மார்கள் காலம் முதற்கொண்டு தமிழிசையை வளர்த்தவர்களிலே பிராமணர்கள் ஏராளமாக இருந்திருக்கிறார்கள்.

சமீப காலத்தில் ஸ்ரீ கோபால கிருஷ்ணபாரதி, கவி குஞ்சர பாரதி, கனம் கிருஷ்ணையர், மகா வைத்திய நாதய்யரின் தமையனார் ராமஸ்வாமி சிவன் ஆகியவர்கள் அழகான தமிழ் ஸாஹித்யங்களைச் செய்தார்கள்.

நம் நாளிலேயும், ஸ்ரீ கோடீசுவரய்யர், பாபநாசம் சிவன், சுவாமி சுத்தானந்த பாரதியார் ஆகியவர்கள் தமிழ்க் கீர்த்தனங்கள் செய்திருக்கிறார்கள்.

இப்படியெல்லாம், ஆயிரம் வருஷத்துக்கு மேலாகச் சாதி சமய வேற்றுமையின்றிப் பல மகான்கள் தமிழிசையை வளர்த்திருக்கும்போது, இன்றைக்கு மட்டும், தமிழிசையானது பிராமணரல்லாதாருடைய உரிமையாகவோ, இயக்கமாகவோ எப்படி ஆகிவிடும்? அல்லது பிராமணருக்கு விரோதமான முயற்சியாகத்தான் எப்படி ஆகும்?

"தமிழிசை இயக்கம்" என்றால் உண்மையில் என்ன? "தமிழ்ப் பாட்டுப்பாட வேண்டும்" என்ற இயக்கந்தானே?



தமிழ்ப் பாட்டு பிராமணர்களுக்கு வேண்டியதில்லையா? விவாத விஷத்தினால் மனம் கெட்டுப் போயிருப்பவர்கள் ஒரு சிலரைத் தவிர, மற்றப்படி பிராமணர்கள் தமிழ்ப் பாட்டை வெறுப்பதாக எனக்குத் தெரியவில்லை.

முக்கியமாக, இப்போதெல்லாம் சங்கீதக் கச்சேரிகளுக்கு ஏராளமாக வரும் பிராமண சகோதரிகளைக் கேட்டால், "தமிழ்ப் பாட்டுத்தான் வேண்டும்" என்று ஏகமனதாக வோட்டுக் கொடுப்பார்கள்.

எனக்குத் தெரிந்து, சென்ற மாதத்தில் ஒரு பிராமண கனவான் தம் வீட்டில் நடந்த கலியாணக் கச்சேரியில் "தமிழ்ப் பாட்டுக்களே அதிகமாய்ப் பாட வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

அரசியல் தலைவர்களில் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரும், காலஞ் சென்ற ஸ்ரீ சத்தியமூர்த்தியும் தமிழ் இசை இயக்கத்தை ஆதரித்திருக்கிறார்கள்.

இப்படியெல்லாம் இருக்கும்போது, தமிழிசை இயக்கத்தைப் பிராமணரல்லாதார் இயக்கம் என்று எவ்விதம் சொல்லலாம்? ஏன் சொல்லவேண்டும்?

அவ்வாறு சுயமரியாதைக் கட்சிக்காரர்கள் பிரசாரம் செய்தால், அதை மறுத்து, "தமிழிசையில் எங்களுக்குப் பங்கு உண்டு" என்று பிராமணர்கள் வற்புறுத்த வேண்டியது நியாயம். இதற்கு மாறாக பிராமணர்களே "தமிழிசை பிராமணரல்லாதாருடையது" என்று சொல்வது சிறிதும் தீர்க்க திருஷ்டியில்லாத மடமைச் செயல்.

விவாத விஷம் நீங்கிய பிறகு எல்லாருமே இதை ஒப்புக்கொள்வார்கள். கர்நாடக சங்கீதத்தையும், தியாகய்யர் தீக்ஷிதர் கிருதிகளையும் பாதுகாப்பதற்காகத் தமிழிசை இயக்கத்தை எதிர்க்கும் அறிவீனம் வேண்டாம் என்பதை உணர்வார்கள்.

இதற்கிடையில், நமது சங்கீத வித்வான்கள் இந்த மோசமான—தற்கொலைக்கொப்பான—பிரசாரத்தினால் மனங் கெடாமல் இருக்கவேண்டும். நமது வித்வான்களும் மேற்படி தாய் பாஷைத் துவேஷப் பிரசாரத்தில் விழுந்து "நாங்கள் தமிழுக்கும் தமிழிசைக்கும் விரோதிகள்" என்று காட்டிக்கொண்டால், அதைவிட அவர்களுக்கே கேடு விளைவிக்கும் காரியம் வேறொன்றும் இல்லை.

# யோக காலம்

கர்நாடக சங்கீதத்துக்கு இது யோக காலம் என்று தோன்றுகிறது. சென்னையில் மூன்று புதிய சங்கீத சபைகள் தோன்றியிருக்கின்றன. ஒவ்வொரு சபைக்கும் அங்கத்தினருக்குக் குறைவேயில்லையென்று தெரிகிறது. புதிய சபைகள் தோன்றத் தோன்ற வித்வான்களுக்கும் ரஸிகர்களுக்கும் கொண்டாட்டந்தானல்லவா?

மூன்றாவது புதிய சங்கீத சபை மயிலாப்பூரில் வெகு விமரிசையாக ஆரம்பித்து வைக்கப்பட்டது. புதிய சபையின் பெயர் "மயிலை சங்கீத சபை". சபையை ஆரம்பித்து வைத்தவர் அதிர்ஷ்டக் கையுள்ளவர் என்று பெயர் பெற்ற ஸர் ஸி. பி. இராமஸ்வாமி ஐயர். மயிலாப்பூரிலுள்ள கனதனவான்கள் அனைவரும் இந்த வைபவத்துக்கு விஜயம் செய்திருந்தார்கள் என்பதைப் பார்க்கும்போது, சபையின் நிர்வாகிகள் பலே கைகாரர்கள் என்று ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. அதோடு, ஜனங்களுடைய சங்கீத ப்ரேமை நாளுக்கு நாள் பெருகி வருவதும் தெரியவந்தது. சபையின் தலைவர் ஸ்ரீ வேங்கடேசுவரன் ஐ. ஸி. எஸ். குறிப்பிட்டபடி புதிய சங்கீத சபையானது பாஷைத் துவேஷமில்லாமல் நல்ல சங்கீதத்தை வளர்க்கும் சிறந்த ஸ்தாபனமாக விளங்கி நாளுக்கு நாள் ஓங்கி வளருமென்று நம்புகிறேன்.

சங்கீதத்துக்கு யோக காலம் என்பதற்கு அத்தாட்சியான இன்னொரு செய்தி:

டிசம்பர் மாதக் கடைசியில் சென்னையில் இரண்டு சங்கீத மகாநாடுகளும், இரண்டு கச்சேரி வரிசைகளும் நடப்பது வழக்கம். **இனி மூன்று மகாநாடுகள் நடக்கப் போகின்றன; மூன்று கச்சேரி வரிசைகளும் நடக்கப் போகின்றன.**

மூன்றுவதாக நடக்கப்போகும் மகாநாடு தமிழிசை மகாநாடாகும். இந்த மகாநாடு அரண்மனைக்காரத் தெருவில் கோகலே ஹாலுக்கு இந்தண்டைப் புறத்தில் உள்ள ஸெண்ட் மேரீஸ் ஹாலில் ஆரம்பமாகும். முதல் நாள் பெரும்பாலும் தமிழிசையைப் பற்றிய பேச்சுக் கச்சேரிகள் நடக்கும். மறு நாளிலிருந்து சங்கீதக் கச்சேரிகள் நடைபெறும்.

இம்மாதிரி தமிழிசை மகாநாடும் கச்சேரிகளும் தனியாக நடப்பதில் சங்கீத வித்வான்களுக்கும் சங்கீத ரஸிகர்களுக்கும் ஒரு பெரிய சௌகரியமிருக்கிறது. தமிழ் மக்களின் உணர்ச்சியை மதித்து நமது வித்வான்கள் தமிழ்ப் பாட்டுக்களை அதிகமாகக் கையாள விரும்புகிறார்கள். ஆனால், மியூஸிக் அகாடமியும் மற்றும் செல்வாக்குள்ள சில பிரமுகர்களும் தமிழிசைக்கு விரோதமாயிருப்பதால் வித்வான்களின் பாடு தர்மசங்கடமாகிறது. இனி அந்த தர்மசங்கடம் அவர்களுக்கு இராது. அகாடமியில் அந்த சபையின் விருப்பத்துக் கிணங்க வித்வான்கள் பாடலாம். தமிழிசை மகாநாட்டில் தமிழ் மக்களின் விருப்பத்துக் கிணங்கப் பாடலாம். ரஸிகர்களும் அவரவர்களுடைய விருப்பம்போல் சங்கீதத்தைக் கேட்டுவிட்டுப் போகலாம்.



இது சம்பந்தமாக, மயிலை சங்கீத சபைத் திறப்பு விழாவின்போது ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் கூறிய இரண்டொரு விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன்.

"தமிழ்மொழி சங்கீதத்துக் கிசைந்த பாஷை இல்லையென்று சிலர் சொல்லுகிறார்கள்; அவர்கள் தமிழ்ப் பெரியோர்கள் பாடியுள்ள அற்புதப் பாடல்களைக் கேளாததினால்தான் அவ்விதம் சொல்கிறார்கள்" என்று கூறினார்.

எனவே, நல்ல தமிழ்ப் பாட்டுக்களைக் கேட்கவும் தமிழின் இனிமையையும் சங்கீத இன்பத்தையும் சேர்ந்து அநுபவிக்கவும் விரும்புகிறவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படுகிறது.

இன்னும் ஸர் ஸி. பி. சொன்னதாவது:—"சங்கீதத்தில் இரண்டு வகை உண்டு; ஒன்று செவிக்கு மட்டும் இனிப்பது. இன்னொரு வகை சங்கீதம் இதயத்தைத் தொடுவது. இதயத்தைத் தொடும் சங்கீதத்துக்கு நல்ல ஸாஹித்யம் மிகவும் அவசியம்."

ஸாஹித்யத்தின் பொருளை உணர்ந்து பாடினால் தான் இதய பாவத்துடன் பாட முடியுமென்றும், அதற்காகவே திருவனந்தபுரம் சங்கீதக் கலாசாலையில் மாணாக்கர்கள் ஸமஸ்கிருதமும், தெலுங்கும் கட்டாயம் கற்றுக்கொள்ள வேண்டுமென்று ஏற்படுத்தி யிருக்கிறதென்றும் ஸர் ஸி. பி. சொன்னார்.

ஆனால், இதய பாவமுள்ள சங்கீதத்தை அநுபவிப்பதற்கு, பாடுகிறவர்களுக்குப் பாட்டின் பொருள் தெரிந்திருந்தால் மட்டும் போதாது. கேட்கிறவர்களுக்

கும் பொருள் தெரிந்திருக்க வேண்டும். அப்போது தான் பாட்டு இதயத்தைத் தொடும். எனவே, அன்னிய பாஷைகளைக் கற்றுப் பொருள் தெரிந்துகொண்டு நல்ல சங்கீதத்தை அநுபவிக்க விரும்புகிறவர்கள் அப்படியே செய்யட்டும். அதற்கு அவகாசமோ சௌகரியமோ இல்லாமல் தாய் பாஷையிலேயே இதய பாவமுள்ள பாட்டைக் கேட்டு அநுபவிக்க ஆசைப்படுகிறவர்கள் தமிழிசைக் கச்சேரிகளுக்குப் போகலாம்.

ஸர் ஸி. பி. இராமஸ்வாமி ஐயர் சொன்னதுபோல், கர்நாடக சங்கீதத்தை விவாதப் போர்க்களமாக ஆக்க வேண்டியதில்லைதான். விவாதத்தை நிறுத்துவதற்காகவே தமிழிசை மகாநாடு நடக்கிறதென்று கூறுவது மிகையாகாது.

# சென்னைத் தமிழிசை மகாநாடு

ஆதி சிவன் பெற்று, ஆரிய மைந்தன் உவந்து பணிசெய்த தமிழ்த் தாயை வாழ்த்துகிறேன். மூன்று குலத் தமிழ் வேந்தர்கள் போற்றி வளர்த்த தமிழ்த் தாய்க்கு வாழ்த்துக் கூறுகிறேன். தமிழ் மக்களுக்கும் தமிழன்பர்களுக்கும் வாழ்த்துக் கூறுகிறேன். தமிழ் நாட்டிலே பிறந்து தமிழ் நாட்டிலே வளர்ந்து தமிழ் நாட்டிலே சிறந்த கர்நாடக சங்கீதக் கலையை வாழ்த்துகிறேன். கர்நாடக சங்கீதத்தின் அன்பர்கள் அனைவருக்கும் வாழ்த்துக் கூறுகிறேன்.

1943-ம் வருஷத்தில் தமிழ்த் தாய் மகத்தான யோகசாலியானாள். கர்நாடக சங்கீதம் புத்துயிர் பெற்றுத் தழைத்தது.

அன்றொரு நாள் பாரதியார் தமிழ்த் தாயின் வாயிலாகப் புலம்பினார்:—

"என்றந்தப் பேதை உரைத்தான்!
இந்த வசை எனக் கெய்திடலாமோ!"

எதைக் குறித்துப் பாரதியார் இவ்விதம் வருந்தினார்? "மேல்நாட்டுப் புதுக் கலைகளைத் தமிழிலே சொல்ல முடியாது—சொல்லும் சக்தி தமிழுக்கில்லை" என்று யாரோ ஒரு பேதை உரைத்தது பாரதியார் காதிலே விழுந்தது. உடனே அவருக்குக் கோபம் மூண்டது. "கூறத் தகாதவன் கூறினன் கண்டீர்!" என்று வெதும்பினார்.

தமிழ்த் தாயின் மேல் ஏற்பட்ட வசைகளுக்குள்ளே மிகக் கொடியது, "தமிழ் மொழி சங்கீதக் கலைக்கு இசைந்த பாஷை இல்லை" என்பதாகும். கூறத் தகாதவர் கூறிய இந்தக் கொடிய வசையானது 1943-ம் வருஷக் கடைசியில் சென்னையில் கூடிய தமிழிசை மகாநாட்டு இன்னிசை வெள்ளத்தில் முழுகியே போய் விட்டது.

## நமது நன்றி

தமிழிசை மகாநாட்டைக் குறித்துச் சொல்வதற்கு முன்னால், இந்த மகாநாடு கூடுவதற்கு மூலகாரணமாயிருந்தவர்களுக்கு என் சார்பாகவும் மற்றத் தமிழன்பர்கள்—இசையன்பர்கள் சார்பாகவும் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். நமது நன்றிக்கும் வந்தனத்துக்கும் உரிய அந்தப் பெரியார்கள் யார்?—கேட்பானேன்?—மியூஸிக் அகாடமியார்தான். மியூஸிக் அகாடமி நிர்வாகிகள் தமிழ் பாஷையின் மேல் அவ்வளவு துவேஷம் பாராட்டாமலிருந்தால்—கொஞ்சம் மனதை விசாலப்படுத்திக்கொண்டு தமிழ்ப் பாட்டுகளுக்கும் ஓரளவு நியாயமான இடம் கொடுத்திருந்தால்—இந்தத் தமிழிசை மகாநாடு கூடியிராது. முக்கியமாக, டிசம்பர் கடைசியில், சென்னையில், இன்னும் இரண்டு சங்கீத விழாக்கள் நடக்கும்போது, தமிழிசை விழாவைத் தனியாக நடத்தும் உத்தேசமே ஏற்பட்டிராது. அகாடமி நிர்வாகிகள் தமிழின் மேல் பகைமை பாராட்டி, "முழு ஹிந்துஸ்தானிக் கச்சேரி வைத்தாலும் வைப்போம்; தமிழுக்கு இடம் கொடுக்க மாட்டோம்" என்று பிடிவாதம் பிடித்ததினாலேதான் தமிழிசை மகாநாடு சென்



னையில் இப்போது கூடிற்று. எனவே, மியூஸிக் அகாடமி நிர்வாகிகளுக்கும், அவர்களுடைய தாய் பாஷை துவேஷத்துக்கும், பிடிவாதத்துக்கும் நமது அபார நன்றி.

## இட நெருக்கடி

"இதற்கு முன் நடந்த எந்த சங்கீத மகாநாட்டையும் விடத் தமிழிசை மகாநாடு சிறப்பாக நடைபெறுமென்று தோன்றுகிறது" என்று முன்னொரு சமயம் எழுதியிருந்தேன். இந்த ஜோசியம் 100-க்கு 100 பங்கு பலித்தது என்பதை மகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறேன்.

ஜன்னல் வழியாக ஏறி உள்ளே குதித்து, இட நெருக்கடியை அதிகப்படுத்தும் காரியத்தை இந்தக் காலத்தில் அடிக்கடி பார்க்கிறோம். இது ரயில்கள் கிளம்பும் சமயத்தில் சகஜமாக நடந்து வருகிறது. ஆனால் ஒரு மண்டபத்துக்குள்ளே நடக்கும் பேச்சைக் கேட்பதற்காக ஜனங்கள் ஜன்னல் ஏறி உள்ளே குதித்து நெருக்கடி உண்டாக்குவதென்பது அடிக்கடி பார்க்கக் கூடியதல்ல.

இந்த அதிசயக் காட்சியை செண்ட் மேரீஸ் ஹாலில் ஆரம்பமான தமிழிசை மகாநாட்டின் போது கண்டோம். ஏற்கெனவே மண்டபத்தில் எள் போட்டால் கீழே விழாதபடி ஜனங்கள் கூடியிருந்தார்கள். ராஜாஜி பேசுவதற்காக எழுந்து நின்றதும், மண்டபத்துக்குப் பக்கத்தில் திறந்த வெளியில் நின்றிருந்தவர்கள் பலர் பெரிய பலகணிகளின் வழியாக உள்ளே வரத் தொடங்கினார்கள். அவர்களை உள்ளேயிருந்தவர்கள் "போங்கள், ஐயா, போங்கள்!" என்று வரவேற்றார்கள். முன்னால் நின்றவர்களைப் பின்னால் வந்தவர்கள் "உட்

காருங்கள், உட்காருங்கள்" என்றார்கள். இந்த மரியாதையெல்லாம் ராஜாஜிக்குத்தானே என்ற விபரீதமான சந்தேகம் (ராஜாஜி உள்படச்) சிலருக்கு ஏற்பட்டுவிட்டது. இது எவ்வளவு தவறான சந்தேகம் என்பது, ராஜாஜி பேசிய முக்கால் மணி நேரமும் ஜனங்கள் எவ்வளவு ஆர்வத்துடனும் ஆரவார கரகோஷத்துடனும் கேட்டுக்கொண்டிருந்தார்கள் என்பதிலிருந்து நன்கு வெளியாயிற்று.

உண்மையில், சென்னை வாசிகள் இவ்வளவு தமிழிசைத் தாகம் கொண்டவர்கள் என்பது அன்றுதான் நன்கு தெரிந்தது. மண்டபத்துக்கு உள்ளேயும் வெளியேயும் சுமார் ஐயாயிரம் ஜனங்கள் நெருக்கியடித்து நின்று மொத்தம் நாலு மணி நேரம் தமிழிசைப் பேச்சுக் கச்சேரிகளைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஒலி பெருக்கியை மண்டபத்துக்கு வெளியிலும் வைத்திருந்தபடியால, தெருவில் நின்றே ஆயிரக்கணக்கான ஜனங்கள் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அரண்மனைக்காரத் தெருவில் இவ்வளவு திரளான ஜனங்கள் நின்ற காட்சியை இதற்கு முன் யாரும் பார்த்திருக்க முடியாது.

## இயக்கத்தின் நோக்கம்

தமிழிசை மகாநாட்டுச் சொற்பொழிவுகளில் முக்கியமானவை நான்கு. ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரின் திறப்பு விழாப் பிரசங்கம், ஸ்ரீ. டி. கே. சிதம்பரநாத முதலியாரின் அக்கிராசனப் பிரசங்கம், ஸர் ஆர். கே. ஷண்முகம், ராஜாஜி இவர்களுடைய பேச்சுக்கள். ஒவ்வொரு பேச்சும் ஒவ்வொரு விதத்தில் ஆணித்தரமாக அமைந்தது.



தமிழிசை இயக்கத்தின் நோக்கங்களை ஐயந்திரிபுக்கு இடமில்லாமல் அழுத்தமாக ராஜா ஸர் எடுத்துச் சொன்னார்.

"தமிழிசை இயக்கம் தூய கலை இயக்கமே. அதில் அரசியல் கலப்பே இல்லை. ஜாதிப் பித்தமும் இல்லை. சமஸ்கிருதத்தையோ, தெலுங்கையோ நாம் வெறுக்கவில்லை. மற்ற மொழியார் தமது தாய்மொழிப் பாட்டையே போற்றுவது போலத் தமிழர் தமிழ்ப் பாடல்களைப் போற்றவேண்டுமென்கிறோம்" என்றார்.

"தமிழ் நாட்டில் நடக்கும் இசையரங்குகளில் தமிழ்ப் பாடல்களே முதன்மை பெறவேண்டும். கச்சேரியின் ஆரம்பமும் மங்களமும் தமிழ்ப் பாட்டுகளாக இருக்கவேண்டும். கச்சேரியின் பெரும் பகுதி தமிழ்ப் பாடலாக இருக்கவேண்டும். இடையிடையே இதர மொழிப் பாடல்களையும் பாடலாம். அதற்குத் தடையில்லை" என்ற தமிழிசைச் சங்கத்தின் நோக்கத்தைத் தெளிவாக எடுத்துக் கூறினார்.

மேற்கண்ட நோக்கத்தை யொட்டியே தமிழிசைக் கச்சேரி திட்டங்கள் அமைந்திருக்கின்றன. பல வித்வான்களுடைய கச்சேரிகளில் தியாகராஜர், தீக்ஷிதர் கிருதிகள் இடம் பெற்றிருக்கின்றன.

இதற்குப் பிறகும், தமிழிசை இயக்கம் அரசியல் நோக்கம் கொண்டதென்றோ, பிற பாஷைகளிடம் துவேஷம் கொண்டதென்றோ யாராவது சொன்னால், அவர்களுடைய மனம் கெட்டுப் போயிருக்கிறதென்பதற்கே அது அறிகுறியாகும்.

**சங்கீத இலக்கியம்**

தமிழிசை இயக்கத்துக்கே ஆதி காரண புருஷர் என்று சொல்லக்கூடிய ரஸிகமணி ஸ்ரீ. டி. கே. சிதம்பர நாத முதலியார் சென்னையில் நடந்த முதல் தமிழிசை விழாவுக்குத் தலைமை வகித்தது மிகவும் பொருத்தமாயிருந்தது.

"தாடியில்லாத தாகூரைப்போல் விளங்குகிறார்" என்று டி. கே. சி.யின் முகத் தோற்றத்தைக் குறித்து ஒரு தடவை "கல்கி"யில் குறிப்பிட்டிருந்தது.

இந்தத் தமிழிசை மகாநாட்டில் டி. கே. சிதம்பர நாத முதலியார் நிகழ்த்திய அக்கிராசனப் பிரசங்கம், தாகூரின் வசன நடையைப் போலவே அற்புதமாய் அமைந்திருந்தது.

கர்நாடக சங்கீதத்தை நமது முன்னோர்கள் பாது காத்து வந்த முறையைப்பற்றி டி. கே. சி. சொன்னதைக் கேளுங்கள்:

"சங்கீதமானது கண்ணுக்குத் தெரியாத பொருள் ஆயிற்றே, காற்றோடு காற்றாய்க் கரைந்து போகிற பொருள் ஆயிற்றே என்று கருதிக் கருங்கல் பணிக்குள் பொதிந்து வைத்தார்கள் போலும்! தமிழ் நாடெங்கும் சிறிய கோவில்களையும் பெரிய கோவில்களையும் எழுப்பி, அக்கோவில்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளின் திருவடிகளில் வைத்தல்லவா சங்கீதக் கலையைப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள்!"

டி. கே. சி. அவர்களின் அக்கிராசனப் பிரசங்கத்தை ஒரு சங்கீத இலக்கியம் என்றே சொல்ல வேண்டும். தமிழர்கள் திரும்பத் திரும்பப் பலமுறை படித்து அநுபவிக்க வேண்டிய இலக்கியம்.



**அமெரிக்காவில் நடந்தது**

தமிழிசை சம்பந்தமாகச் சாதாரணத் தமிழனுடைய கட்சி இன்னதென்பதை ஸர் ஆர். கே. ஷண்முகம் பட்டவர்த்தனமாகச் சொன்னார். "தமிழ்ப்பாட்டு மட்டமாயிருந்தாலும் எனக்குத் தமிழ்ப் பாட்டுத்தான் வேண்டும்" என்றார். அவர் அமெரிக்காவில் இருந்தபோது நிகழ்ந்த ஒரு சம்பவத்தையும் கூறினார்.

சென்னையிலிருந்து அவருக்குக் கிடைத்த பத்திரிகைகளில் தமிழிசைக் கிளர்ச்சியைப் பற்றிய செய்திகள் இருந்தனவாம். அவற்றை அவருடைய நண்பரான அமெரிக்கர் ஒருவர் படித்துவிட்டு, வியப்புடன், "இதென்ன பைத்தியக்காரத்தனம்? உங்கள் நாட்டில் தமிழ்ப் பாட்டு வேண்டுமென்று ஏன் கேட்கிறார்கள்?" என்றாராம், "அப்படிக் கேட்பதில் என்ன தப்பு?" என்றாராம் ஸர் ஷண்முகம். "உங்கள் தாய் பாஷையில் உள்ள பாட்டுக்கள் உங்களுக்குப் பிடிக்காதோ?" என்று அந்த நண்பர் கேட்டாராம். "அட நாராயணா! தமிழ்தான் எங்கள் தாய்ப் பாஷை!" என்று ஸர் ஷண்முகம் சொன்னதும் அந்த அமெரிக்கருக்கு ஒரே ஆச்சரியமாய்ப் போய்விட்டதாம். "தாய் பாஷையில் இல்லாமல் வேறு பாஷைகளிலேயே நீங்கள் பாடுவது வழக்கமா? இது என்ன வேடிக்கை!" என்று அதிசயப் பட்டாராம்.

இனிமேல் இம்மாதிரி யெல்லாம் அதிசயிப்பதற்கும், அயல்நாட்டார் நம்மைப் பார்த்துச் சிரிப்

தற்கும் இடமிராது. அதற்கெல்லாம் இடமில்லாமல் தமிழிசை மகாநாட்டின் வெற்றி செய்து விட்டது.

**கதரும் தமிழிசையும்**

ராஜாஜி பேச எழுந்ததும் கூட்டத்தில் ஏற்பட்ட சிறு குழப்பத்தைப்பற்றி மேலே குறிப்பிட்டிருக்கிறேன். அதை ராஜாஜியே தவருக எண்ணிக்கொண்டது ஒரு விதத்தில் ரொம்பவும் நல்லதாய்ப் போயிற்று. எதிர்ப்பு ஏற்படும்போது ராஜாஜியின விவாத சக்தி அபரிமித மாய்ப் பிரகாசிக்கிறது என்பதைக் கண்டிருக்கிருேம். அம்மாதிரிதான் இங்கும் ஆயிற்று. ராஜாஜி தமிழிசை இயக்கத்தைப் பூரணமாய் ஆதரித்து முக்கால் மணி நேரம் பேசினுர். தமிழிசைக்கு எல்லாப் பக்கங்களி லிருந்தும் வரும் எல்லா எதிர்ப்புகளையும் குறிப்பிட்டு, அவை எல்லாவற்றுக்கும் பதில் சொன்னுர்.

எதிர்க் கட்சிக்காரர்களின் ஆட்சேபங்களை ராஜாஜி ஒவ்வொன்ருக எடுத்துத் தெளிவுபடுத்தியபோது, சபையில் சிலருக்கு "இது ஏது ஆபத்தா யிருக்கிறதே!" என்று தோன்றியது. ராஜாஜி எடுத்துச் சொல்லும்போது எதிர்க்கட்சி வாதங்கள் அவ்வளவு பலமானவையென்று காணப்பட்டன. அவற்றுக்கு ராஜாஜி பதில் சொன்ன போதோ, தமிழிசைக் கட்சியின் வெற்றிக் கொடி வானளாவி உயர்ந்து பறந்தது.

தமிழிசை மகாநாட்டுக் கச்சேரிகளில் முதலிலும் கடைசியிலும் தமிழ்ப்பாட்டா யிருக்க வேண்டும் என்று ஏற்படுத்தி யிருக்கிருர்கள். இது ஏதோ வித்வான்களைக் கட்டாயப்படுத்துவதாகும் என்று சிலர் நினைக்கக் கூடுமல்லவா? இதற்குத்தான் ராஜாஜி சொன்னுர் :—



"கதர் இயக்கம் ஆரம்பித்தபோது இப்படித்தான் சிலர்—அன்னிபெஸண்ட் அம்மை முதலியவர்கள்— ஆட்சேபித்தார்கள். 'கதர்தான் கட்ட வேண்டுமென்று ஏன் கட்டாயப்படுத்துகிறீர்கள்? சுதேசி மில் துணியை யும் ஏன் சேர்த்துக் கொள்ளக் கூடாது?' என்ருர்கள். அதற்கு நாம் சம்மதிக்கவில்லை. 'சுதேசி மில் துணிக்கு நம்முடைய பிரசாரம் தேவையில்லை. கதரே கட்ட வேண்டுமென்று கட்டாயமாய்ச் சொன்னுல் 100-க்கு 10 பேராவது கதர் கட்டுவார்கள்' என்று சொன்னேம். அது மாதிரிதான் இதுவும். தமிழிசையை வளர்ப்பதற் காக ஏற்பட்ட இயக்கத்தில் 'தமிழ்ப் பாட்டே பாட வேண்டும்' என்று சொல்லுவதுதான் நியாயம்."

இந்த மகாநாட்டில் ராஜாஜியின் பேச்சு தமிழிசை இயக்கத்துக்கே ஒரு மகத்தான வெற்றி என்று சொல்ல வேண்டும். அந்தப் பேச்சை மட்டும் வார்த்தைக்கு வார்த்தை எடுத்துப் பிரசுரித்திருந்தால், பிறகு தமிழிசை யைப் பற்றி யாரும் எதுவுமே பேசுவதற்கு அவசிய மிராது.

**தமிழுக்கும் பணம்**

மறுநாள் முதல் ஸெண்ட் மேரீஸ் ஹாலில் தமிழிசைக் கச்சேரிகள் நடந்தன. மண்டபத்துக்குள்ளே ஆயிரக்கணக்கானவர்கள் அமர்ந்து ஆவலுடன் கேட்டு மகிழ்ந்தார்கள். மண்டபத்துக்கு வெளியே தெருவில் ஆயிரக்கணக்கானவாகள் நின்று கேட்டு ஆரவாரித் தார்கள்.

இதற்கு முன்னுல் பல இடங்களில் நடந்திருக்கும் தமிழிசை மகாநாடுகளுக்கும் சென்னையில் நடந்த மகா

நாட்டுக்கும் ஒரு முக்கிய வித்தியாசம் உண்டு. வெளியூர் மகாநாடுகள் எல்லாம் பிரசார நோக்கத்துடன் கூடியவை. அவற்றுள் பேச்சுக் கச்சேரிகளும் இலவசம்; பாட்டுக் கச்சேரியும் இலவசம்.

இந்த மகாநாட்டில் நடக்கும் பாட்டுக் கச்சேரிகளுக்கு டிக்கட் உண்டு.

பண வருவாயைக் கொண்டு மதிப்பிடும்போது, தமிழிசை எந்தத் தரத்தில் இருக்கிறது? எதற்குப் பணம் அதிகம் வருகிறது?

சந்தேகம் என்ன? தமிழிசைக்குத்தான். மற்ற இரண்டு மகாநாடுகளிலும் சேர்ந்து டிக்கட் விற்பனையில் வரும் பணத்தைக் காட்டிலும் தமிழிசைக்கு அதிகம் வந்திருக்கிறது என்று அறிகிறேன்.

ஸீஸன் டிக்கட்டுகள் மட்டும் ரூ. 32,000 (முப்பத்திரண்டாயிரம் ரூபாய்க்கு) விற்பனையாகி யிருக்கிறதென்று தெரிகிறது.

எனவே, தமிழ் மக்களின் உள்ளத்தில் தமிழிசை மட்ட ரகத்தைச் சேர்ந்ததாயில்லை என்பது நிச்சயமாகிறது. தமிழ்ப் பாட்டுக் கச்சேரிகளுக்கும் ஜனங்கள் பணம் கொடுத்து ஏராளமாக வருவார்கள் என்று ஏற்படுகிறது.

எனவே, எல்லாவிதத்திலும் தமிழிசை இயக்கம் மகத்தான வெற்றியை யடைந்திருக்கிறது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## இன்னும் எதிர்ப்பு

தமிழிசை இயக்கத்துக்கு இன்னும் எதிர்ப்பு இல்லாமற் போகவில்லை. எந்த துரதிர்ஷ்டத்தினாலோ தமிழ் பாஷையின்மேல் துவேஷம் கொண்டவர்கள் இன்னமும் ஏதாவது எதிர்த்துச் சொல்லிக்கொண்டுதானிருக்கிறார்கள்.



ஆனால், சென்ற வருஷத்து எதிர்ப்புக்கும், இந்த வருஷத்திய எதிர்ப்புக்கும் ரொம்ப வித்தியாசம் இருக்கிறது.

சென்ற வருஷத்தில், தமிழிசை இயக்கத்தை அலட்சியமாகத் தாக்கிப் பரிகசித்தார்கள்.

இந்த வருஷத்திலோ தங்களுடைய கட்சிக்குச் சப்பைக் கட்டுக் கட்டப் பெருமுயற்சி செய்கிறார்கள்!

எதிர்ப்புக் கலகலத்துப் போய்விட்டது என்று அவர்களுக்கே தெரிந்துதானிருக்கிறது. எனவே, தாங்கள் விரித்த வலையிலிருந்து தாங்களே வெளியில் வருவதற்கு அவர்கள் திணறுகிறார்கள்.

எதிர்ப்புக்காரர்களுக்கு இனிமேல் பதில் சொல்லிக் கொண்டிருப்பது வீண் வேலை. ஏனெனில், எல்லாவித எதிர்ப்புக்களுக்கும் தமிழிசை மகாநாட்டுக் கச்சேரிகளே தக்க பதில் சொல்லுகின்றன.

உதாரணமாக, சென்னையின் பிரபல ஆங்கில தினசரிப் பத்திரிகை ஒன்றில், "தமிழ்ப் பாட்டு பாட வேண்டாம் என்று யார் சொன்னார்கள்? முத்துத்தாண்டவர் முதலானவர்களின் பாட்டுக்கள் இருக்கத்தான் இருக்கின்றன. ஆனால் அவற்றைக் கச்சேரியின் கடைசியில் பாடினால்தான் சோபிக்கின்றன" என்று எழுதியிருக்கிறது.

ஆனால், தமிழிசை மகாநாட்டுக் கச்சேரிகளில் முதலிலிருந்தே தமிழ்ப் பாட்டுக்கள்தான் பாடப்படு

கின்றன. இதனால் கச்சேரிகள் சோபிக்காமற் போக வில்லை; அபாரமாய்ச் சோபிக்கின்றன. இதைக் காட்டிலும் தக்க பதில் எதிர்ப்புக்காரர்களுக்கு நாம் வேறு என்ன சொல்ல முடியும்?

### சில வித்தியாசங்கள்

சில விஷயங்களில் தமிழிசை நிர்வாகிகள் செய்த ஏற்பாடுகள் போற்றத்தக்கவையாயிருக்கின்றன; மற்ற வர்களுக்குப் பாடம் கற்பிக்கக் கூடியவையா யிருக் கின்றன.

1. சங்கித மகாநாடுகளில் கச்சேரி புரோகிராம் அடங்கிய புத்தகம் ஒன்று வெளியிடுவது வழக்கம். அகாடமியார் வெளியிடும் புத்தகத்தில், அகாடமி அக்கிராசனர், திறப்பாளர், போஷகர் முதலிய பெரிய மனிதர்களின் படங்களைப் பெரிதாய்ப் பிரமாண்டமாய் அச்சிடுவார்கள். வருஷா வருஷம் இந்தப் பெரிய மனிதர் படங்களையே போட்டு, கர்நாடக சங்கீதத்துக் குத் தொண்டு செய்வார்கள். சங்கீதக் கச்சேரிகளையும் வித்வான்களுடைய படங்களையும் அச்சிடுவது அநா வசியம் என்றோ, அகாடமியின் கௌரவத்துக்குக் குறைவென்றோ விட்டுவிடுவார்கள்.

ஆனால் தமிழிசை மகாநாட்டுப் புத்தகத்திலோ மகாநாட்டில் கச்சேரி செய்யும் எல்லா வித்வான்கள் —பக்க வாத்தியக்காரர்கள் படங்களும் அழகாக வெளியிடப்பட்டிருக்கின்றன.

2. அகாடமி நிர்வாகிகள் மாலை போடுதல் முதலிய மரியாதைகளைத் தங்களுக்கே செய்து கொள்வார்கள்; வித்வான்களுக்கு நாமத்தைப் போடுவார்கள்!



தமிழிசைக் கச்சேரியில் ஒவ்வொரு நாளும் வித் வான்களுக்கு மாலை போட்டு மரியாதை செய்கிறார்கள்.

3. அகாடமிக் கச்சேரிகளுக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு போகிறவர்கள், அங்கே தங்களுக்கு என்ன மரியாதை கிடைக்கிறதோ என்று நடுங்கிக் கொண்டு தான் போக வேண்டும்!

தமிழிசை மகாநாட்டிலோ, கச்சேரிகளுக்கு வருகிற வர்களை மரியாதை செய்து அழைத்துப்போய் அவர்களு டைய இடத்தைக் காட்டி உட்கார வைக்கும் முறையை எவ்வளவு பாராட்டினாலும் போதாது. ஏதோ நெருங்கிய சிநேகிதர்கள் வீட்டுக் கல்யாணத்துக்குப் போகிற மாதிரி தமிழிசைக் கச்சேரிகளுக்கு ரஸிகர்கள் குஷியாக வந்துவிட்டுப் போகிறார்கள்.



# தமிழ்த் தாயின் வெற்றி

"தமிழில் பாடினால் கர்நாடக சங்கீதம் போய் விடும்?" என்று யார் சொன்னது?

அப்படிச் சொன்னவர்களை மூலை முடுக்குகளில் தேடிப் பிடியுங்கள்.

அவர்கள் முகத்தைக் கொஞ்சம் காட்டச் சொல்லுங்கள். "ஏன் இப்படி முகத்தில் மூன்றும் பேஸ்து வைத்திருக்கிறது?" என்று கேளுங்கள்.

"தமிழ்த்தாய் உங்களுக்குத் தாய்தானே? தமிழ்த் தாயின் வெற்றி எதற்காக இவ்வளவு துக்கத்தை உங்களுக்கு உண்டுபண்ணவேண்டும்?" என்று விசாரியுங்கள். "கர்நாடக சங்கீதம் விலங்கை முறித்துக் கொண்டு விடுதலை பெற்றதில் உங்களுக்கு என்ன வருத்தம்?" என்று கேளுங்கள். "வேண்டாம்; அழவேண்டாம்!" என்று அவர்களுக்கு ஆறுதல் சொல்லுங்கள்.

* * *

சென்னையில் கூடிய முதலாவது தமிழிசை மகாநாடு முடிவடைந்தது.

"இதற்கு முன்னால் சென்னையில் வேறெந்த சங்கீத மகாநாடும் இவ்வளவு சிறப்பாக நடைபெறவில்லை" என்ற புகழுடன் முடிவடைந்தது.

தமிழ்நாட்டுச் சங்கீத மேடையில் முன்னணியில் உள்ள வித்வான்கள் மகிழ்ச்சியுடன் முன்வந்து கச்சேரி செய்தார்கள்.

கச்சேரி செய்த பதினாலு வித்வான்களில் பத்துப் பேர் மியூஸிக் அகாடமியில் கச்சேரி செய்தவர்கள். பாக்கி நாலு பேரில் இருவர் பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடியில் கச்சேரி செய்தவர்கள்.

எல்லாரும் ஆரம்பத்திலும் கடைசியிலும் தமிழாகவும், இடையில் பெரும்பாலும் தமிழாகவும் கச்சேரி செய்தார்கள். சில வித்வான்கள் முழுமையும் தமிழ்ப் பாட்டாகவே கச்சேரி செய்தார்கள்.

ஒவ்வொரு நாளும் மண்டபத்தில் சங்கீத ரஸிகர்கள் ஏராளமாய்க் கூடியிருந்து ஆர்வத்துடன் தமிழிசையைப் பருகினார்கள்.

அரண்மனைக்காரத் தெருவில் தினந்தோறும் ஆயிரக் கணக்கிலும், சில தினங்கள் பல்லாயிரக் கணக்கிலும் ஜனங்கள் கூடிநின்று ஒலிபெருக்கியின் மூலம் பெருகிய தமிழிசை வெள்ளத்தில் மூழ்கி ஆனந்தித்தார்கள்.

* * *

சென்ற ஒரு தலைமுறையில் நம் கண் முன்னால் தமிழ்த்தாய் மூன்று அரிய வெற்றிகள் அடைந்திருப்பதைக் காண்கிறோம்;

சுமார் இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னால் "அரசியல் விஷயங்களைத் தமிழ் பாஷையிலே சொல்ல முடியாது; விவாதிக்க முடியாது" என்ற குருட்டு நம்பிக்கை இருந்தது; அது அடியோடு தொலைந்து போய்விட்டது. "அரசியலைப்பற்றித் தமிழில் பேசுவது போல் அவ்வளவு லாகவமாக வேறு பாஷைகளில் பேச முடியாது" என்று ஏற்பட்டு விட்டது.

இதுமட்டுமா? "அரசியல்" என்றாலே "தமிழ்" என்ற அர்த்தம் 1943-ல் உண்டாகிவிட்டது!

இந்த வருஷத்து மியூஸிக் அகாடமியில் பேசினவர்கள், "**சங்கீதத்தில் அரசியலைப் புகுத்தக் கூடாது!**" என்று பேசி யிருக்கிறார்கள்.

அதாவது "தமிழ்" என்பதற்குப் பதிலாக "அரசியல்" என்ற வார்த்தையை உபயோகப்படுத்தி யிருக்கிறார்கள்.

இது தமிழ்த்தாய் அடைந்த முதலாவது வெற்றி.

அடுத்தபடியாக "கலாசாலைகளில் பௌதிகம், ரசாயனம் முதலிய விஞ்ஞானக் கலைகளைத் தமிழிலே போதிக்க முடியாது" என்ற இன்னொரு பலமான குருட்டு நம்பிக்கை தமிழ்நாட்டில் இருந்து வந்தது.

அதுவும் இப்போது அடிபட்டுப் போயிற்று. "விஞ்ஞானக் கலைகளைத் தமிழிலேதான் போதிக்க வேண்டும்" என்று உபாத்தியாயர் சங்கங்களிலே தீர்மானிக்கப்படுகிறது. அநேக பள்ளிக்கூடங்களில் தாய் பாஷையில் விஞ்ஞான பாடங்களைப் போதித்து வருகிறார்கள். இது தமிழ்த் தாயின் இரண்டாவது பெரும் வெற்றி.

நமது கண் முன்னால் தமிழ்த்தாய் அடைந்திருக்கும் மூன்றாவது வெற்றி தமிழிசையின் வெற்றியாகும். மூன்றிலும் இதுதான் முக்கியமான வெற்றி; மகத்தானவெற்றி.

எவ்விதமென்றால் தற்கால அரசியலும் விஞ்ஞானக் கலைகளும் தமிழ் மொழிக்கோ தமிழ் நாட்டுக்கோ விசேஷமாக உரியன என்று நாம் பாத்தியதை பாராட்ட முடியாது. அவை அயல் நாட்டிலிருந்து வந்தவை.

ஆனால், கர்நாடக சங்கீதக் கலையோ தமிழர்களின் சொந்த சொத்து; தமிழ் நாட்டின் பரம்பரை உடைமை.



"நம்முடைய சங்கீதம் வெகு புராதனமான சங்கீதம். ஆயிரக்கணக்கான வருஷங்களாகப் பழுத்த சங்கீதம். தமிழ் மக்களுக்கு—ஆடவர் பெண்டிர் குழந்தைகள் எல்லாருக்குமே—அமுதத்தை யூட்டிய சங்கீதம். கோயில்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளுக்கு அர்ப்பணமான சங்கீதம்" என்று தமிழிசை மகாநாட்டுத் தலைவர் அருமையாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

இப்பேர்ப்பட்ட நமது சங்கீதம் கால வித்தியாசத்தினாலே வேறு பாஷைகளின் போர்வையைப் போர்த்திக் கொண்டது. இதன் காரணமாக, நம்முடைய சொத்தை நம்முடைய சொத்து என்று தெரிந்து கொள்வதே சிரமமாய்ப் போய்விட்டது. நம்மிலேயே சில புத்திசாலிகள் கர்நாடக சங்கீதம் பிறந்த இடத்தை வடக்கே தேடத் தொடங்கினார்கள். வடக்கே எங்கேயும் தடையம் கிடைக்காமல் போகவே, கர்நாடக சங்கீதத்தை யார் தலையிலே கட்டுவது என்று தெரியாமல் விழித்தார்கள்.

இன்னும் "தமிழ் பாஷை சங்கீதத்துக்கு ஏற்றதல்ல," "தமிழில் நல்ல பாட்டுக்கள் இல்லை," "தமிழில் பாடினால் கர்நாடக சங்கீதத்தின் தரம் குறைந்து போய்விடும்" "கச்சேரி எடுபடாது" என்றெல்லாம் அபத்தமான கொள்கைகளை—தாய் மொழிக்கு அபசாரமான கொள்கைகளை—பிரசாரம் செய்யத் தொடங்கிவிட்டார்கள்.

இந்த அபத்தங்களையெல்லாம் சென்னைத் தமிழிசை மகாநாடு அடித்துத் தள்ளிவிட்டது. "கர்நாடக சங்கீதம் தமிழர்களுடையது; அது தமிழிலும் சோபிக்கும்; தமிழிலேதான் நன்றாய்ச் சோபிக்கும்" என்று ஏற்பட்டுவிட்டது. எனவே, தமிழ்த் தாயின் இந்த மூன்றாவது வெற்றி மிகவும் மகத்தான வெற்றியாகும்.

# மூன்று கச்சேரிகள்

1944-ம் வருஷம் முதல் தேதி யன்று தமிழிசை மகாநாட்டில் ஒரு மகத்தான சங்கீதக் கச்சேரி நடந்தது.

பாடியவர் ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமண்யம். பக்க வாத்தியங்கள்: ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை, பாலக் காட்டு மணி, பழனி சுப்பிரமணியப் பிள்ளை.

இன்றைக்குத் தமிழ் நாட்டு சங்கீத மேடையில் முதன்மை ஸ்தானத்தை வகிக்கும் வித்வான் ஸ்ரீ ஜி என். பாலசுப்பிரமணியம். பக்க வாத்தியக்காரர்களும் அப்படியே அவரவர்களுடைய வாத்தியத்தில் முதன் மையா யிருப்பவர்கள்.

இந்த வருஷம் மூன்று சங்கீத விழாக்களிலும் கச் சேரி செய்தவர் ஜி. என். பி. ஒருவர்தான். மூன்று கச்சேரிகளையும் கேட்ட ஜி. என். பி. விசிறிகள் "இதை விட அது ஓசத்தி; அதைவிட இது ஓசத்தி" என்று ஒப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். தமிழிசைக் கச்சேரி ஒன்றுதான் நான் கேட்டதாகையால், அது எனக்கு ரொம்ப 'ஓசத்தி'யாகத் தோன்றியது.

"தண்டனிட்டேன் என்று சொல்லடி"

என்னும் ஸ்ரீ ராமலிங்க சுவாமிகளின் கீர்த்தனத்துடன் கச்சேரி ஆரம்பமாயிற்று. பைரவி ராகத்தில் "யாரோ இவர் ஆரோ?" என்னும் அருணசலக் கவியின் கீர்த் தனம் கர்ணமிர்தமாயிருந்தது. கல்யாணி ராகத்தைக் கரகோஷ ஆரவாரத்துக்கிடையே ஆலாபனம் செய்து "ஏதாவுனரா" என்னும் தியாகராஜ கீர்த்தனம் பாடி ஸ்வர விஸ்தாரம் செய்தார்.

இவ்விடத்தில் பக்க வாத்தியக்காரர்கள் தங்கள் கைவரிசைகளைக் காட்ட ஆரம்பித்தார்கள். தமிழிசைக் கச்சேரியில் பிரமாதமாக வாசித்துப் புகழ்பெற வேண்டு மென்று அவர்கள் ஆசைப்பட்டதாகத் தோன்றியது.

பாலக்காட்டு மணியும் பழனி சுப்பிரமணியப் பிள்ளையும் மாற்றி மாற்றிச் சுமார் 45 நிமிஷம் ஆவர்த் தனம் வாசித்தார்கள். ஒருவருக்கொருவர் பஞ்சை யில்லை என்று தோன்றும்படி அமர்க்களமாக வாசித் தார்கள். முடிவில் இருவரும் சேர்ந்து வாசித்த போது இருவருடைய விரல்களும் இயந்திரத்தினால் இயங்குவது அதிசய ஒற்றுமையுடனும் விரைவுடனும் இயங்கிச் சபை யினரை உற்சாக வெள்ளத்தில் ஆழ்த்தி விட்டன.

"ஆடும் தெய்வம்" "இனியொரு கணம்" ஆகிய கீர்த்தனங்கள் வழக்கம் போல் நன்கு அமைந்தன.

காம்போதி கீர்த்தன ஸ்வரத்தில் ஸ்ரீ ராஜமாணிக் கம் பிள்ளை புங்கானு புங்கமாக வாசித்துச் சபையில் இசை வெள்ளம் பெருகும்படி செய்தார்.

முக்கிய ராக ஆலாபனத்துக்கு எடுத்துக்கொண்ட சிம்மேந்திர மத்தியமத்தில் பாடகர் சுருதி பேதம் செய்து மாயாமாளவ கௌளத்தின் சாயை காட்டினார்.

பல்லவிக்குப் பிறகு இரண்டு தமிழ் உருப்படிகள் பாடியதும் காலம் சரியாய்ப் போய்விடவே, 'பவமான' என்னும் மங்களத்தை எடுத்தார். மங்களத்தைக் கேட்டதும் நீண்டகால வழக்கத்தினால் சபையில் பாதிப் பேர் எழுந்தார்கள். பாக்கிப் பாதிப் பேரிடையே சிறிய

பரபரப்பு ஏற்பட்டது. "வாழிய செந்தமிழ்" என்ற பாரதியாரின் பாட்டை ஜி. என். பி. எடுத்ததும் அந்தப் பரபரப்பு அடங்கியது.

உண்மை யென்ன வென்றால், தமிழிசை மகா நாட்டில் முதலிலும் கடைசியிலும் தமிழாக இருக்க வேண்டுமென்று ஏற்படுத்தி யிருந்தார்கள். நடுவில் வேறு பாஷையில் பாடுவதைத் தடைசெய்யவில்லை. எனவே ஜி. என். பி. "நீநாம" என்னும் மங்களம் பாடிக் கடைசியில் 'வாழிய செந்தமிழ்' பாடி முடிப்பதாகத் தமிழிசைத் தலைவர்களிடம் கேட்டுச் சம்மதம் பெற்றிருந்தார். ஆனால், இந்த விவரம் சபையில் பெரும்பாலோருக்குத் தெரியாதபடியால் மேற்கூறிய சிறு பரபரப்பு ஏற்பட்டது.

ஸ்ரீ ஜி. என். பி. பாலசுப்பிரமணியம் தமிழிசை மகா நாட்டில் வந்து பாடியதை ஒரு முக்கிய சம்பவமாக நான் கருதுகிறேன். அதைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

பிரபல கர்நாடக சங்கீத வித்வான்களுடைய நல்ல அபிப்பிராயமும் ஆதரவும் அவருக்குத் தேவை.

மேற்படி பிரபல வித்வான்கள் தமிழிசை மகா நாட்டில் கச்சேரி செய்ய மறுத்ததையும் அவர் அறிவார். அவருடைய கச்சேரிக்கு முதல் நாள்தான் அகாடமியில் மேற்படி பிரபல வித்வான்கள் கூடி "தமிழிசை இயக்கத்தினால் கர்நாடக சங்கீதமே நாசமாகிவிடும்" என்று தீர்மானம் செய்திருந்தார்கள்.

இப்படி யெல்லாமிருந்தும் ஜி. என். பி. தமிழிசை மகாநாட்டில் வந்து கச்சேரி செய்தது, அவருடைய விரிந்த நோக்கத்துக்கும் தமிழ்ப் பொது மக்களின் அபிப்பிராயத்துக்கு அவர் அளிக்கும் மரியாதைக்கும் சிறந்த அத்தாட்சியா யிருந்தது.



இந்த விகிதத்தில், ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை, பாலக்காட்டு மணி, பழனி சுப்பிரமணியப் பிள்ளை ஆகியவர்களையும் நான் பெரிதும் பாராட்டுகிறேன்.

இந்தக் கச்சேரியில் குறை என்று சொல்லக் கூடியதாக இருந்தது, காலக் குறைவுதான். பாலக்காட்டு மணி மிருதங்கமும் பழனி சுப்புடு கஞ்சிராவும் ஏற்படுத்திவிட்டு, ஒரு பெரிய வித்வானுடைய கச்சேரியை மூன்று மணிக்குள் முடிக்க வேண்டுமென்றால் அது சிரமமான காரியம் என்பதில் சந்தேகமில்லை. இதனால், ஜி. என். பி. பல்லவிக்குப் பிறகு வழக்கமாய்ப் பாடும் அழகிய பாரதியார் பாட்டு முதலியவைகளைப் பாட முடியாமல் போயிற்று.

* * *

சென்ற சில வருஷமாக எந்தச் சங்கீத விழாவிலும் எம். எஸ். கச்சேரி என்றால், அன்றைக்கு ஒரு விசேஷ சோபை பெற்று விளங்குவது வழக்கம். கோவில் உற்சவங்களில் ஐந்தாம் திருநாள்—திருக்கல்யாண உற்சவம் மாதிரி, எம். எஸ். கச்சேரியன்று சபை நிர்வாகிகள், ரஸிகர்கள் எல்லாருக்கும் ஏக உற்சாகம், ஒரே குதூகலம். ஆனால் கூட்டத்தைச் சமாளிக்க வேண்டுமே யென்ற கவலையும் ஒருபுறம் இருக்கும்.

இந்தக் கவலையும் குதூகலமும் தமிழிசைக் கச்சேரியில் பன்மடங்கு ஆகியிருந்தது.

நிர்வாகிகள் விசேஷ முன் ஜாக்கிரதை எடுத்து மண்டபத்துக்கு வெளியிலேகூட நாற்காலிகள் போட்டு

உட்கார இடவசதி செய்திருந்தார்கள். அந்த முன் ஜாக்கிரதை யெல்லாம் எவ்வளவு அவசிய மென்பது கச்சேரி அன்று தெரிய வந்தது.

பண வசூல் விஷயத்தில் இந்தக் கச்சேரியானது எட்டிப்பிடிக்க முடியாத எல்லையை ஸ்தாபித்தது. சென்னை சங்கீத சபையின் சரித்திரத்தில் ஒரு தனிக் கச்சேரிக்கு ரூ. 3840 வசூலானது இதுவரையில் கிடையாது. (ஸீஸன் டிக்கட்டுகளைத் தவிர.)

அரண்மனைக்காரத் தெருவில் அன்று சுமார் பதினாயிரம் ஜனங்கள் நின்று நாலு மணி நேரம் ஒலிபெருக்கி மூலம் கச்சேரி கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

இவ்வளவு குதூகலத்துக்குத் தகுந்தபடி அன்று எம். எஸ். ஸின் கச்சேரியும் அபூர்வமாய் அமைந்தது.

கச்சேரி நாலு மணி நேரம் நடக்கும் என்று முதலிலேயே மகாநாட்டு நிர்வாகிகள் அறிவித்து விட்டார்கள்.

பல்லவிக்கு முன்னால் ஒன்பது தமிழ் சாஹித்ய கர்த்தாக்களின் ஒன்பது உயர்தரமான தமிழ்க் கீர்த்தனங்களை எம். எஸ். பாடினார். அவருடைய கச்சேரிகளில் வழக்கமா யிருப்பதுபோல் சங்கராபரண ஆலாபனமும், "யாரோ என்று" என்னும் கீர்த்தனமும் கச்சேரியின் நடு நாயகமா யடைந்தன. "**காலைத் தூக்கி நின்று ஆடும் தெய்வமே;**" என்னும் யதுகுல காம்போதி கீர்த்தனத்தை மத்திம சுருதியில் பாடியபோது உணர்ச்சி வெள்ளம் கரை புரண்டது. மேடையில் பின்னால் அலங்கரித்து வைத்திருந்த ஸ்ரீ நடராஜரின் திவ்ய வடிவத்தையும் மேற்படி பாட்டின் ஸாஹித்யத்தையும் ஒப்பிட்டுப் பரவசமடையாதவர்கள் அச்சமயம் யாரும் இல்லை.



கரகரப்ரியா ராகம்—பல்லவிக்குப் பிறகு இனிமை மிக்க கண்ணன் பாட்டு, வேலன் பாட்டு, ராட்டைப் பாட்டு ஆகியவைகளைப் பாடினார். கடைசியில், "யாமறிந்த மொழிகளிலே" என்னும் பாரதியார் பாடலை ராக மாலிகையில் உருக்கமாகப் பாடி, "செந்தமிழ் நாடெனும் போதினிலே" என்று உச்ச ஸ்தாயியில் எடுத்தபோது, சபையோர் அனைவரும் கரதாளம் போட்டுக்கொண்டு ஆரவாரித்த காட்சி மறக்க முடியாத காட்சியாகும். தேவகோட்டை தமிழிசை மகாநாட்டில் கண்ட ஆவேசத்தை இந்தச் சென்னை நகரிலும் அன்று காணக் கூடியதாயிற்று.

இந்த வருஷத்துச் சங்கீத விழாக்களில் ஒரு விசேஷம் என்னவென்றால், இலங்கையிலிருந்து சுமார் இருநூறு சங்கீத ரஸிகர்கள் வந்திருந்ததாகும். இவர்கள் பெரும்பாலும் தமிழிசை மகாநாட்டுக் கச்சேரிகளுக்கு வந்து கேட்டு ஆனந்தித்தார்கள். இலங்கை சர்க்காரில் பிரபல உத்தியோகம் வகிக்கும் ஸ்ரீ கே. கனகரத்தினம் அவர்கள், எம். எஸ். கச்சேரியின்போது, இலங்கைத் தமிழர்களின் சார்பாகச் சில வார்த்தைகள் பேசினார். ஸ்ரீமதி எம். எஸ். சமீபத்தில் இலங்கைக்கு வந்திருந்து அங்குள்ள ரஸிகர்களைத் தமிழிசை வெள்ளத்தில் மூழ்கடித்ததைப் பற்றி அவர் பெருமையுடன் குறிப்பிட்டு விட்டு, தமிழிசை இயக்கத்தை இலங்கைத் தமிழர்களின் சார்பாக ஆதரித்து வாழ்த்துக் கூறினார்.

* * *

தமிழ் மக்களின் பெருமதிப்பையும் அபிமானத்தையும் கவர்ந்த பாடகிகளில் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் ஒருவர். ஆனால் சென்ற சில வருஷங்களில் அவர்

ரேடியோவில் பாடும்போதெல்லாம் தமிழிசை இயக்கத்தின் பரம விரோதியைப்போல் தெலுங்குக் கீர்த்தனங்களையே அதிகமாய்ப் பாடி வந்தார். சபைகளில் பாடும்போதும் நெடுகிலும் தெலுங்குக் கீர்த்தனங்களையே பாடி வருவதும், சில சமயம் சபையோர் "தமிழ், தமிழ்" என்று கத்துவதும், அதன்மேல் கடைசியில் தமிழ்ப் பாட்டுப் பாடுவதும் வழக்கமா யிருந்து வந்தது.

அதோடு இந்தத் தமிழிசை மகாநாட்டில் ஸ்ரீமதி கே. பி. எஸ். பாட மறுத்து விட்டதாக முதலில் தகவல் கிடைத்தது.

எனவே, அவர் கடைசியில் தமிழிசை மகாநாட்டில் பாடுகிறார் என்ற செய்தி தமிழிசை அன்பர்களிடையே மிகுந்த ஆவலை உண்டுபண்ணி யிருந்தது. அதற்குத் தகுந்தபடி அன்று மண்டபத்திலும் வெளியிலும் ஜனக் கூட்டம் அலைமோதிக் கொண்டிருந்தது.

ஸ்ரீமதி கே. பி. எஸ். நாடக மேடையில் பிரசித்தி பெற்றிருந்த காலத்திலே கூட இவ்வளவு பெருங் கூட்டம் கூடியிருக்குமென்று நான் நினைக்கவில்லை.

அகாடமியிலும், மற்றச் சபைகளிலும் கே. பி. எஸ். கச்சேரிகள் சிலவற்றை நான் கேட்டிருக்கிறேன். அவற்றுக்கும் இந்தத் தமிழிசை மகாநாட்டுக் கச்சேரிக்கும் மடுவுக்கும் மலைக்கும் உள்ள வித்தியாசம் என்று சொன்னால் மிகையாகாது.

தூய வெள்ளைக் கதராடை அணிந்து நெற்றியில் பளிச்சென்று திருநீறு தரித்து விளங்கும் ஸ்ரீமதி சுந்தராம்பாள் கச்சேரி மேடையில் வீற்றிருக்கும்போது, பழந் தமிழ்நாட்டுப் பெண் தெய்வங்களான காரைக்காலம்



மையார், திலகவதியார் முதலியவர்களை ஞாபகப்படுத்துகிறார்.

அத்தகையவர் அர்த்தம் தெரியாத தெலுங்கு பாஷைக் கீர்த்தனங்களை உணர்ச்சியே யில்லாமல் பாடிக்கொண்டிருப்பதும், சபையோர் அதைக் கேட்டு, "இந்தக் கஷ்டமெல்லாம் இவருக்கு எதற்காக?" என்ற பாவத்துடன் தூங்கி வழிவதும் யாருக்குப் பிரீதி என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

தமிழின் சுவையை அநுபவித்து உணர்ச்சி ததும்பப் பாடக்கூடியவரான ஸ்ரீமதி சுந்தராம்பாள், ஸ்ரீ நடராஜப் பெருமானையும், ஆறுமுகக் கடவுளையும் பற்றிய அழகிய தமிழில் பாடும்போதே அவரும் சரி, சபையோரும் சரி, பக்திபரவசப்பட்டு மெய்மறந்து விடுகிறார்கள்.

ஸ்ரீமதி சுந்தராம்பாள் அன்று ஷண்முகப்ரியா ராகத்தில் "தந்தைதாய் இருந்தால் உமக்கு இந்தத் தாழ்வெல்லாம் வருமோ?" என்று சிவபெருமானைக் குறித்துப் பாடியபோது, ஒவ்வொரு வரியையும் சபையோர் ரஸித்து அனுபவிப்பதற்கு அறிகுறியாகக் கரகோஷம் செய்தார்கள்.

"யாமார்க்கும் குடியல்லோம்"

என்னும் அப்பர் ஸ்வாமிகளின் அற்புதமான பாடலை ராகமாலிகையில் பாடியபோது கே. பி. எஸ். தமது சொந்தச் சரக்கையும் இடையிடையே சேர்த்துக் கொண்டு,

"பிணி அறியோம் — பசிப் பிணி அறியோம் — இன்று அறிந்தோம் — ஆனாலும் பணிவோ மல்லோம்!"

என்றும் பாடிச் சபையில் விசேஷ குதூகலத்தை உண்டு பண்ணினர்.

மொத்தத்தில் அன்று கே. பி. எஸ். செய்த கச்சேரியானது அவருடைய வாழ்க்கையிலும் தமிழிசை இயக்கத்தின் சரித்திரத்திலும் ஒரு முக்கிய ஸ்தானத்தைப் பெற்றுவிட்டது என்பது மிகையாகாது.

தமிழிசைக் கச்சேரிகளில் பக்கவாத்தியம் வாசித்தவர்கள் எவ்வளவோ சிரத்தையுடன் வாசித்துக் கச்சேரிகளை நிரக்கப்பண்ணினர்கள்.

ஆனாலும், ''இந்தத் தமிழிசை மகாநாட்டில் நானும் கலந்து கொள்ளத்தான் செய்வேன்!'' என்று முன்வந்த சேத்தூர் ஜமீன்தாரைக் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. ஸ்ரீ சுவாமிநாதப் பிள்ளையின் புல்லாங்குழல் கச்சேரியில் சேத்தூர் ஜமீன்தார் கஞ்சிரா வாத்தியத்தை அமர்க்களமாய் வாசித்துச் சபையோரை அடிக்கடி குதூகலத்தில் ஆழ்த்தியது மறக்க முடியாத சம்பவமாகும்.

* * *

ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார் அவர்கள் தமிழிசை இயக்கத்துக்காகச் செய்துவரும் மகத்தான முயற்சிகளை நான் பெரிதும் பாராட்டுகிறேன். ஆனல், ராஜா ஸர் அவர்களின் பணத்தினுலேதான் தமிழிசை இயக்கம் நடைபெறுகிறதென்பது பெரும் அபத்தமாகும்.

தமிழிசை இயக்கத்தின் துரிதமான வளர்ச்சிக்கும், மகத்தான வெற்றிக்கும் காரணம் தமிழ் மக்களின் உள்ளத்தில் பொங்கிக்கொண்டு கிடந்த ஆர்வந்தான். இதைச் சென்னைத் தமிழிசை மகாநாடு நன்கு நிரூபித்து விட்டது.



தமிழிசை இயக்கத்துக்கு ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியாரின் பணமே தேவையில்லை,—தமிழ்ப் பொது மக்களே வேண்டிய பணம் கொடுக்கத் தயாரா யிருக்கிருர்கள் என்பது தமிழிசைக் கச்சேரிகளில் ருசுவாயிற்று. மொத்தத்தில் மற்ற சங்கீத சபைகளில் சாதாரணமாய் வசூலாகும் பணத்தைவிடத் தமிழிசைக் கச்சேரிகளுக்கு அதிகமாகவே வசூலாயிற்று.

கலைகளின் உயர்வைப் பணத்தைக்கொண்டு அளவிடக் கூடாதுதான். ஆனல், ஜனங்களின் ஆர்வத்தை அளப்பதற்குப் பண வசூல் ஒரு சாதனம் என்பதில் சந்தேகமில்லை. இந்த முறையில் பார்க்கும்போது தமிழிசையில் தமிழ்ப் பொது மக்கள் கொண்டிருக்கும் ஆர்வமானது நன்ருகப் புலப்பட்டு விட்டது.

* * *

தமிழிசை மகாநாட்டின் மகத்தான வெற்றிக்கு எத்தனையோ பேரின் மனப்பூர்வமான தொண்டு காரணமா யிருந்தது. ஆனாலும், அந்த வெற்றிக்கும் பிரதான காரண புருஷர் யார் என்பதைப்பற்றி எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. தமிழர் பண்பாடே ஓர் உருவெடுத்தவரும், துவேஷம்—வெறுப்பு என்பதையே அறியாதவரும், எதிராளிகளிடம் உள்ள நல்ல அம்சங்களைத் தேடிப் பிடித்துப் பாராட்டுகிற உத்தமருமான ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களின் தூய உள்ளத்தில் பிறந்து வளர்ந்தது தமிழிசை இயக்கம். அவர் கண் முன்னல், அவருடைய தலைமையில், அவ்வியக்கம் இத்தகைய பெரும் வெற்றி யடைந்தது குறித்துப் பெரு மகிழ்ச்சியுடன் அவருக்கு வாழ்த்துக் கூறுகிறேன்.

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே!
வான மளந்த தனைத்து மளந்திடும்
வண்மொழி வாழியவே!

# கர்ஞடக சங்கீத வித்வான்களுக்கு

தமிழ் நாட்டிலுள்ள பிரபல சங்கீத வித்வான்களுக்கும், மாஜி வித்வான்களுக்கும், இளம் வித்வான்களுக்கும்—

திருவையாற்றில் நீங்கள் வழக்கம்போல் தியாகராஜ ஆராதன உற்சவம் அமோகமாக நடத்தினீர்கள் என்று அறிந்து மகிழ்கிறேன். மிகவும் சந்தோஷம். தியாகராஜரிடம் நீங்கள் கொண்டுள்ள பக்தி மேலும் மேலும் வளர்ந்து பெருகுவதாக. ஸ்வாமிகளின் அருளால் நீங்கள் சாரீர சங்கீத சம்பத்துக்களையும் மற்றும் இகபர சாதகங்களையும் அடைந்து உய்வீர்களாக.

இந்த முக்கிய சந்தர்ப்பத்தில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளுக்கும் அவருடைய அழகிய கீர்த்தனங்களுக்கும் வந்திருக்கும் பெரிய ஆபத்தைப்பற்றி உங்களுக்கு எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன்.

தியாகராஜர் என்ருலே தமிழ் மக்கள் வெறுக்கும்படி செய்யவும், தியாகராஜ கீர்த்தனங்களை துவேஷிக்கும்படி செய்யவும் சில மகான்கள் வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்து வருகிருர்கள்.

இவர்கள் யார் தெரியுமா ?

தமிழிசை இயக்கத்தை எதிர்க்கும் புண்ணியவான்கள்தான். "தமிழ்ப் பாட்டுப் பாடிஞல் சங்கீதம் மட்டமாகிவிடும்" என்று கூறும் மகானுபாவர்கள்தான்.

தமிழ் நாட்டிலிருந்து எந்தக் காலத்திலாவது அற்புதமான தியாகராஜ கிருதிகள் மறையும்படி நேருமாஞல், அந்தப் பாவமானது மேற்கூறிய தமிழிசை விரோதிகளின் தலையிலேயே முழுக்க முழுக்கச் சாரும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இது எப்படி என்று சொல்வதற்கு முன்ஞல் பூர்வாங்கமாக ஒரு விஷயம் தெரியப்படுத்த விரும்புகிறேன்.

கர்நாடக சங்கீதத்தின் உயர்வை எந்த வகையிலும் குறைக்க நான் விரும்பவில்லை. ஒருநாளும் விரும்ப மாட்டேன்.

"தமிழ் மக்கள் மட்டமானவர்கள்; அவர்களுக்கு மட்டமான விஷயந்தான் பிடிக்கும்" என்ற கொள்கை எனக்குக் கிடையவே கிடையாது.

"தமிழ் மக்கள் மிக்க உயர்ந்தவர்கள்; அவர்களுக்கு எல்லாத் துறையிலும் உயர்வான விஷயங்களே வேண்டும்" என்பது என் திடமான கொள்கை.

எனவே, கர்நாடக சங்கீதத்தை அதன் உயர்விலிருந்து அணுவளவேனும் குறைக்க நான் விரும்பவில்லை.

இன்னும், தியாகராஜரிடமும் தீக்ஷிதரிடமும் ஒருவித வெறுப்பும் எனக்குக் கிடையாது. அவர்களிடத்திலும் அவர்களுடைய கீர்த்தனங்களிடத்திலும் பெருமதிப்பும், விருப்பும் எனக்கு உண்டு. அவைகளைத் தமிழ் நாட்டுக்குக் காப்பாற்றிக் கொடுக்கவே நான் விரும்புகிறேன.

ஆனால், மேலே குறிப்பிட்ட விரோதிகள் இருக்கி றார்களே, அவர்கள் தியாகராஜ ஸ்வாமிகளுக்குத் திருவையாற்றில் சமாதி எழுப்பியிருப்பதுபோல அவரு டைய கீர்த்தனங்களுக்கும் சமாதி எழுப்பிவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார்கள் போலிருக்கிறது.

அவர்களுடைய காரியம் எப்படிப்பட்டதென்ப தைக் கவனியுங்கள்.

தமிழ் நாட்டில் வசிக்கும் நம்மில் 100க்கு 99 பேர் தமிழர்கள்; தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட வர்கள்.

தமிழ் மொழியிடம் பற்றுக் கொள்வது உலகமெங் கும் உள்ள மனித இயற்கை. தமிழ் மக்களிலும் மிகப் பெரும்பாலோர் தாய் மொழியில் பற்றுக் கொண்டவர் களா யிருப்பதில் ஆச்சரியமில்லை.

அப்படித் தமிழன்பு கொண்ட தமிழர்களிடம் போய், "தமிழ் மட்டமான பாஷை; தெலுங்கு, கன்ன டம், மலையாளம், மகாராஷ்டிரம் முதலிய எல்லா பாஷையும் உயர்ந்தவை; தமிழ் மட்டுந்தான் மட்ட மானது" என்று சொன்னால், அதனுடைய பலன் என்ன வாகும்?"

தாய் மொழியிடம் அன்பு கொண்ட தமிழர்கள் மேற்படி தெலுங்கு முதலிய இதர பாஷைகளை வெறுக் கத் தொடங்குவார்களா, மாட்டார்களா?

அவ்விதம் தமிழ்நாட்டில் 100-க்கு 99 பேர் தெலுங்கு, சமஸ்கிருத பாஷைகளையும் தியாகராஜ— தீக்ஷிதர் கிருதிகளையும் வெறுத்துப் பகைக்கும்படியான காரியத்தை ஒரு சிறு கூட்டத்தார் செய்து வருகிறார்கள்.



இவர்கள் என்ன சொன்னார்கள், தெரியுமா? "தமிழிலாவது, பாடுவதாவது? தமிழ், சங்கீதத்துக்கே எடுக்காத பாஷை" என்றார்கள்.

அப்படிச் சொன்னதின் பலனை அவர்கள் கண்டு கொண்டு, "தமிழ் சங்கீதத்துக்குப் பொருந்தாத பாஷை என்று சொன்னது தப்பு, தப்பு" என்று கன் னத்தில் போட்டுக்கொண்டார்கள்; தோப்புக்கரணம் போட்டார்கள்.

அதே ஆசாமிகள் இப்போது என்ன சொல்கிறார் கள், தெரியுமா?

"தமிழ் மட்டம் என்று நாங்கள் சொல்லவில்லை; தெலுங்கு உயர்ந்த பாஷை என்றும் சொல்லவில்லை. தியாகராஜ கிருதிகளில் உயர்ந்த சங்கீத உருவங்கள் அமைந்திருக்கின்றன. தமிழிசை இயக்கத்தினால் அந்த உயர்ந்த சங்கீத உருவங்கள் போய்விடுமே என்றுதான் கவலைப்படுகிறோம்!" என்கிறார்கள்.

தியாகராஜரின் கீர்த்தனங்களில் வெறும் சங்கீத உருவங்கள் மட்டுந்தான் இருக்கின்றன என்பது மகா அபசாரம் என்று நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். அந்த பக்தசிரோமணி இருதய பூர்வமாக இராமனை நினைந்து கதறிய பிரேம பக்தி வெள்ளம் அந்த சங்கீத உருவங் களிலே ததும்பிக் கொண்டிருக்கிறது.

அத்தகைய கீர்த்தனங்கள் தமிழ் நாட்டிலிருந்து போய்விடுவதாயிருந்தால், அதற்குக் காரணம் தமிழிசை இயக்கமாயிராதென்பது நிச்சயம். தமிழிசை இயக்கத் தின் எதிரிகளால்தான் அவை போக நேரிடும்.

ஏனெனில், தமிழிசைக்காரர்கள் தியாகராஜ கீர்த்தனங்களைப் பாடக்கூடாது என்று சொல்லவில்லை; தியாகய்யர், தீக்ஷிதர் கிருதிகளைக் கற்றுக்கொள்ளக் கூடாதென்றும் சொல்லவில்லை.

தமிழிசைக்காரர்கள் கேட்டுக் கொள்வதெல்லாம், தமிழ் நாட்டுக் கச்சேரிகளில், தமிழ்ப் பாட்டை விரும்பும் சபைகளில், அதிகமாய்த் தமிழைப் பாடவேண்டுமென்பதுதான்.

தமிழிசை இயக்கத்துக்கு முன்னால் நமது வித்வான்கள் சாதாரணமாய்க் கச்சேரிகளில் ஒரு தீக்ஷிதர் கீர்த்தனந்தான் பாடுவது வழக்கம். சிலர் அதுகூடப் பாடுவதில்லை. சியாமா சாஸ்திரிகளின் கிருதிகளையும் அபூர்வமாய்த்தான் பாடுவார்கள். அதனால் தீக்ஷிதர் கிருதிகளும் சாஸ்திரிகளின் கிருதிகளும் போய்விட்டனவா? இல்லையே?

தமிழிசை இயக்கத்தின் பயனாகக் கர்நாடக சங்கீத வித்வான்களுக்கு ஒன்றுக்குப் பத்தாகக் கச்சேரி செய்யும் சந்தர்ப்பம் கிடைக்கும். கச்சேரிக்கு ஒன்றிரண்டு பாடினாலும் தியாகய்யர், தீக்ஷிதர் கீர்த்தனங்கள் அதிகமாய்ப் பரவ இடம் ஏற்படும்.

ஆனால், தமிழிசையின் விரோதிகள் அத்தகைய சந்தர்ப்பம் வித்வான்களுக்கு ஏற்படாமல் செய்யப் பார்க்கிறார்கள்.

இன்னும், தியாகய்யர்—தீக்ஷிதர் பெயர்களைக் கேட்டாலே 100-க்கு 99 தமிழ் மக்கள் வெறுப்படையும்படி செய்யப்பார்க்கிறார்கள்.



இத்தகைய வெறுப்பு, தமிழிசை விரோதிகளின் பிரசாரத்தின் பயனாகச் சென்ற ஒரு வருஷத்தில் தமிழ் மக்களிடையே அதிகம் பரவி வருவதை மிக்க வருத்தத்துடன் உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன். உங்களில் பிரபல வித்வான்கள் சிலர் மேற்படி தமிழிசை விரோதிகளின் வலையில் விழுந்து தியாகராஜருக்கும், தீக்ஷிதருக்கும் மகத்தான துரோகத்தைச் செய்து வருகிறார்கள் என்பதையும் கவலையுடன் குறிப்பிடுகிறேன்.

சென்னையில் நடந்த தமிழிசை மகாநாட்டில் உங்களில் பிரபல வித்வான்கள் சிலர் கச்சேரி செய்யச் சம்மதிக்கவில்லை. இதற்கு அவர்கள் கூறிய காரணங்கள் என்ன?

" தமிழ்க் கச்சேரி செய்யக்கூடிய நல்ல பாட்டுக்கள் இல்லை " என்று அவர்கள் சொல்லவில்லை.

உண்மையில், ஸ்ரீ. அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் முதலில் ஒரு தெலுங்கு வர்ணம் பாடிவிட்டு அப்புறம் எல்லாம் தமிழ்ப் பாட்டுக்களாகவே கச்சேரி செய்வதாக ஒப்புக்கொண்டார். முதலில் தெலுங்கு வர்ணம் பாடவேண்டுமென்பது தம்முடைய "குருவின் கட்டளை " என்று கூறினார்.

தமிழிசைக்காரர்கள் அதற்கு இணங்காதபடியினால்தான் அய்யங்காரின் கச்சேரி தமிழிசை மகாநாட்டில் நடக்கவில்லை.

இதனால் தமிழிசைக்குப் பெரிய நஷ்டம் நேர்ந்துவிடவில்லை யென்பதையும் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும்.

கர்நாடக சங்கீதமானது ஐயங்காருடன் பிறந்து ஐயங்காருடன் அழிந்துவிடப் போவதில்லை.

மியூஸிக் அகாடமியில்கூட ஐயங்கார் சில வருஷம் கச்சேரி செய்ய வராமலிருந்தார். அதனால் சங்கீதத்துக்குப் பெருந் தீங்கு விளைந்துவிடவில்லை.

தமிழ் நாட்டில் எத்தனையோ சங்கீத வித்வான்கள் சிறிது காலம் பிரமாதமாய்ப் பிரகாசித்துவிட்டுப் பிறகு மங்கிப் போயிருக்கிறார்கள்.

முசிரி அய்யர்வாள் ஒரு காலத்தில் தமிழ் நாட்டு சங்கீத மேடையில் இணையற்று விளங்கினார். இப்போது அவருடைய சாரீரத்துடன் அவர் மல்லுக்கு நிற்பதைப் பார்க்க நமக்கு எவ்வளவோ வருத்தமா யிருக்கிறது. ஆனால் இதனாலும் கர்நாடக சங்கீதம் போய்விடவில்லை.

ஒரு சமயம் செம்பை வைத்தியநாத பாகவதர் என்றால் பிரமாத தடபுடல் பட்டது. அவருடைய சாரீரம் இன்றைக்கும் ஒரு குறையுமின்றி கணீரென்று ஒலிக்கிறது. எனினும், இப்போது மியூஸிக் அகாடமியார்கூட அவரைக் கச்சேரிக்கு அழைப்பதில்லை.

இதனாலெல்லாம் கர்நாடக சங்கீதம் போய்விடவில்லை. அதுபோலவே, அரியக்குடியார் கச்சேரி செய்யாததினால் தமிழிசையும் பெரு நஷ்டம் அடைந்துவிடவில்லை. நஷ்டம் அடைந்தவர் ஐயங்கார்தான். பதினாயிரக்கணக்கான தமிழ் மக்கள் தமது சங்கீதத்தைக் கேட்டு அநுபவிக்கும் பாக்கியத்தை அவர்தான் இழந்துவிட்டார்.

ஆனாலும் நான் ஏன் கவலைப்படுகிறேன் என்றால், ஆங்கிலம் படித்த ஒரு சிறு கூட்டத்தாரின் வலையிலே



விழுந்து மேற்படி பிரபல தமிழ் வித்வான்கள் செய்யும் காரியத்தினால், நாட்டில் துவேஷம் வளர்ந்து வருவதையும், தியாகராஜர், தீக்ஷிதர் கிருதிகளைத் தமிழ் நாட்டு ஜனங்கள் வெறுக்க ஆரம்பித்திருப்பதையும் நேருக்கு நேர் நான் பார்த்து வருவதினாலேதான்.

"தமிழிசைக் கச்சேரிகளில் முதலிலும் கடைசியிலும் தமிழ்ப் பாட்டுப் பாட வேண்டுமென்னும் நிர்ப்பந்தம் எதற்காக? இப்படியெல்லாம் வித்வான்களைக் கட்டுப்படுத்தலாமா?" என்று நீங்கள் கேட்கலாம்.

மேற்படி கட்டுப்பாட்டை நானும் விரும்பவில்லை என்று உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழிசை இயக்கத்திலே சேர்ந்த சில முக்கியஸ்தர்கள் மேற்படி கட்டுப்பாட்டை எடுத்து விடவே முயன்றார்கள். ஆனால் தமிழிசை இயக்கத்தைச் சேர்ந்தவர்களில் 100-க்கு 99 பேர் அதற்குச் சம்மதிக்கவில்லை.

இதற்குக் காரணம் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?

தமிழிசை இயக்கத்தின் ஆரம்பத்திலும், சமீப காலத்திலுங்கூட, அத்தகைய கட்டுப்பாட்டை ஏற்படுத்தும் எண்ணம் யாருக்கும் இருக்கவில்லை!

பின், எதனால் அக்கட்டுப்பாடு ஏற்பட்டது? "தமிழ் மட்டம் என்றும், "தமிழ்ப் பாட்டினால் சங்கீதம் கெடும்" என்றும் சிலர் முட்டாள்தனமாகத் தற்கொலைப் பிரசாரம் செய்ததுதான் காரணம்."

தமிழை அகௌரவப்படுத்தி ஒரு சிறு கூட்டத்தார் பேசப் பேச, தமிழின் கௌரவத்தை ஸ்தாபிப்பதற்

தாகத் தமிழன்பர்கள் மேற்கூறியது போன்ற கட்டுப் பாடுகளை ஏற்படுத்த ஆரம்பிக்கிறார்கள்.

ஆனால், மேற்படி கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுப் பாடுவதினால் வித்வான்களுக்கு ஏதோ அகௌரவம் என்று நினைத்துக் கொள்வது பெரும் பிசகு என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"தாய் பாஷையாகிய தமிழ் மொழிக்குக் கௌரவம் அளியுங்கள்!" என்று சொல்வதில் அகௌரவம் என்ன இருக்க முடியும்?

அப்படித் தாய்மொழியைக் கௌரவிக்க முடியாது என்று பிடிவாதமாய்ச் சொல்கிறவர்களிடம் தமிழ் மக்களுக்குக் கோபமும் வெறுப்பும் உண்டாவது இயல்பல்லவா?

அந்தக் கோபமும் வெறுப்பும் தியாகராஜர்—தீக்ஷிதர் கிருதிகளின் மேலேயே திரும்பக்கூடும் என்பதை நீங்கள் சாவதானமாகச் சிந்தித்துப் பார்க்கும்படி கோருகிறேன்.

தியாகராஜர்—தீக்ஷிதர் உற்சவங்களில் அவர்களுடைய கீர்த்தனங்களையே சாதாரணமாய்ப் பாடுவது வழக்கமாயிருந்து வருகிறது. இதில் அகௌரவம் ஏதாவது உண்டா? அதுபோலவே தமிழிசையை வளர்க்கக் கூடுகிற மகாநாடுகளில் தமிழ்ப் பாட்டுக்களையே பாடுவதிலும் அகௌரவம் ஒன்றும் கிடையாது என்பதை நீங்கள் உணரவேண்டும்.

இன்னும், வித்வான்களாகிய உங்களிலேயே இரண்டொருவர் அதிகப்பிரசங்கித்தனமாகப் பேசிப்



பொதுமக்களிடையே வெறுப்பை வளர்த்து வருகிறார்கள் என்பதையும் கவனிக்கக் கோருகிறேன்.

உதாரணமாக, செம்மங்குடி சீனுவாசய்யர்வாள் "சங்கீதத்தைப் பற்றிப் பாமரர்கள் பேச ஆரம்பித்தால் சங்கீதம் பாழாய்ப் போய்விடும்" என்று சொன்னதாகப் பத்திரிகைகளில் பார்த்திருப்பீர்கள்.

ஜனங்களைப் படித்தவர்கள்—பாமரர்கள் என்று பிரிப்பதாயிருக்கும் பட்சத்தில், செம்மங்குடி ஐயர்வாளைப் பாமரர் கோஷ்டியிலேயே சேர்க்க வேண்டியதாயிருக்கும் என்பதும் நீங்கள் அறிந்த விஷயந்தான். சந்தேகமிருந்தால் அவர் பாடும் தெலுங்கு அல்லது ஸமஸ்கிருதக் கீர்த்தனத்துக்கு அர்த்தம் கேட்டுப் பாருங்கள். "அந்த எழவெல்லாம் இங்கே யாருக்குத் தெரியும்?" என்று பளிச்சென்று ஐயர்வாளிடமிருந்து பதில் வரும்.

கலைவாணர்கள் தங்கள் கலையில் எவ்வளவோ தேர்ச்சி பெற்றிருக்கலாம். ஆனால் அவர்களுடைய கலையை மதிப்பிடும் உரிமை எப்போதும் ரஸிகர்களுக்கும் பொது மக்களுக்கும் உரியதாகும். அவர்களைப் 'பாமரர்கள்' என்று கூறி அவமதிப்பது தற்கொலைக்கு ஒப்பானது.

தற்சமயம் செம்மங்குடி ஐயர்வாள் அவ்விதம் பொதுமக்களைப் 'பாமரர்கள்' என்று அவமதிக்கும் நிலைமையில் இருக்கலாம். ஆனால், நீங்கள் எல்லாரும் அந்த நிலைமையில் இல்லை. அந்த நிலைமைக்கு வர நீங்கள் ஆசைப்படவும் மாட்டீர்கள்.

ஆதலின், உண்மையில் நீங்கள் கர்நாடக சங்கீதத்தைக் காப்பாற்ற விரும்பினுல், தியாகராஜர்–தீக்ஷிதர் கீர்த்தனங்கள் தமிழ் நாட்டிலிருந்து மறைந்து விடாமல் பாதுகாக்க விரும்பினுல், தியாகராஜ ஸ்வாமிகளிடம் நீங்கள் கொண்டிருப்பது உண்மையான பக்தியா யிருக்கும் பட்சத்தில், தமிழைப்பற்றியோ, தமிழிசையைப் பற்றியோ மட்டமாகப் பேசக்கூடாது. அப்படித் தாய் மொழியை அவமதித்துப் பேசுகிற பேதைகளின் கூட்டத்தில் சேரவும் கூடாது.

அதற்கு மாருக, தமிழிசை இயக்கத்தில் நீங்கள் எவ்வளவுக்கு மனப்பூர்வமாகவும் உற்சாகத்துடனும் ஈடுபடுகிறீர்களோ, அவ்வளவுக்கு நாட்டில் துவேஷம் பரவாமலிருக்க உதவி செய்தவர்களாவீர்கள். அவ்வளவுக்குத் தியாகராஜ – தீக்ஷிதர் கிருதிகளைப் பாதுகாப்பதற்கும் நீங்கள் ரொம்பவும் துணைபுரிந்தவர்களாவீர்கள்.

# செம்மங்குடியின் தொண்டு

தேச பக்தர்கள் ஒவ்வொரு சமயம் தேச சேவையில் அலுப்படைந்து சும்மா இருந்தாலும் இருப்பார்கள். ஆனுல் தேசத் துரோகிகளினுல் சும்மா இருக்க முடியாது ; தேசத்தைப் படுகுழியில் தள்ளினுல் ஒழிய அவர்களுக்குத் தூக்கம் வராது.

தாய்ப் பாஷையில் துவேஷம் கொண்டவர்களின் நிலைமையும் அப்படித்தான் என்று தோன்றுகிறது. தாய்ப் பாஷைத் துவேஷம் என்னும் விஷம் ஒருவருடைய இரத்தத்தில் ஏறிவிட்டால், அதைப் பற்றியே ஏதாவது பிதற்றிக் கொண்டிருந்தாலொழிய அவர்களால் வாழ்க்கை நடத்த முடியாது போலிருக்கிறது. தமிழிசை இயக்கத்தின் விரோதிகளின் காரியங்களிலிருந்து இது தெளிவாகிறது.

நாட்டில் தமிழிசை சம்பந்தமான விவகாரங்கள் எல்லாம் அடங்கி எல்லாரும் விவாதத்தையே மறந்திருக்கும் சமயத்தில் இவர்கள் யாரையாவது பிடித்துக் கொண்டு வந்து தமிழிசையைத் தாக்கி ஒரு பிரசங்கம் செய்ய வைக்கிருர்கள். அதிலிருந்து “ அடியைப் பிடிடா பாரத பாட்டா !” என்று விவகாரம் மறுபடியும் மூளுகிறது. இவ்விதம் அடிக்கடி நடப்பதைப்பார்த்து வந்திருக்கிரோம்.

மேற்படி விவகாரத்தை அங்குரார்ப்பணம் செய்து ஆரம்பித்துவைத்த திருத்தொண்டைச் செம்மங்குடி சீனிவாசய்யர் செய்திருக்கிருர்.

செம்மங்குடியின் சங்கீத வித்வத்தில் எனக்கு அளவிலாத மதிப்பு உண்டு. அவருடைய சங்கீதக் கச்சேரிகளை நான் பரவசமாக அநுபவித்ததுபோல் வேறு யாருடைய கச்சேரியையும் அநுபவித்ததில்லை. இணை யற்ற மனோதர்ம கற்பனைகளுடன் வாசாம கோசரமாக அவர் கரகரப்ரியா, கல்யாணி முதலிய ராகங்களை ஆலாபனம் செய்யும்போது நான் மெய்மறந்து போயிருக்கிறேன். நமது காலத்தில் கர்நாடக சங்கீதத் தின் மகிமைக்கு எல்லைக் கல் நாட்டக் கூடியவர் இவர் தான் என்று எண்ணி மகிழ்ந்திருக்கிறேன். இப்போது அவருடைய சாரீர வசதி குறைந்திருந்த போதிலும், அதனால் அவருடைய சங்கீதப் பெருமை குன்றி விட்ட தாக அநேகரைப்போல் நான் கருதவில்லை.

எனவே, அப்படிப்பட்ட வித்வான் சங்கீதத்தைப் பற்றியும் தமிழிசையைப் பற்றியும் பேச முன் வந்திருக் கும்போது, அவர் என்ன சொல்லுகிறார் என்பதைக் கவனிக்காமல் நான் தள்ள முடியாது.

செம்மங்குடியின் பேச்சில் (''ஹிந்து'' பத்திரிகை யில் வெளியாகி யிருக்கிற பிரகாரம்) இரண்டு விஷயங் கள் எனக்கு மிகவும் திருப்தியளிக்கின்றன. சங்கீத வித்தையைப் பணத்துக்கு விற்பதையும், டிக்கட் வசூலைக்கொண்டு மதிப்பிடுவதையும் அவர் வெறுக் கிறார். இது மிகவும் திருப்திகரமான விஷயம். இனிமேல் செம்மங்குடி பணத்துக்குக் கச்சேரி செய்வதையும், முக்கியமாக டிக்கட் வசூல் கச்சேரிகளில் பாடுவதை யும் நிறுத்தி விடுவார் என்று நம்புகிறேன். இவ்விதம் செய்தால், கர்நாடக சங்கீதத்தின் பரமோபகாரி என்ப



தாக அவருக்கு ஒரு சிலை பண்ணி வைக்கவேண்டிய தாகும்.

அடுத்தபடியாக, தனிப்பட்ட கச்சேரிகளில் பூராவும் தமிழ்ப் பாட்டுக்களாகவே பாடுவதற்குத் தாம் தயாராயிருப்ப தாகச் செம்மங்குடி தெரியப்படுத்தி யிருக்கிறார். இது மிகவும் சந்தோஷமான செய்தியாகும்.

தமிழிசை மகா நாட்டில் செம்மங்குடி பாட மறுத்த படியால் அவர் தமிழ்ப் பாட்டுப் பாடவே மறுக்கிறார் என்று ஒரு வதந்தி பரவியிருக்கிறது. இது தவறு என்று இப்போது ஏற்படுகிறது. ''கட்டாயமாய்த் தமிழ்ப் பாட்டே பாடவேண்டும்'' என்று சொல்லுவதைத்தான் செம்மங்குடி ஆட்சேபிப்பதாகத் தெரிகிறது. உண்மை யில் தமிழிசை மகாநாட்டில்கூடக் ''கட்டாயமாக எல் லாம் தமிழ்ப் பாட்டே பாடவேண்டும்'' என்று கட்டா யப்படுத்தவில்லை. பெரும்பாலும் தமிழ்ப்பாட்டுப்பாட வேண்டுமென்று தான் கேட்டுக் கொண்டார்கள். அது போனால் போகட்டும்.

இப்போது, கட்டாயப் படுத்தாத இடங்களில் தமிழ்ப் பாட்டாகவே பாடிக் கச்சேரி செய்ய அவர் ஒத்துக்கொள்கிறார் என்பதுதான் முக்கியமான விஷயம்.

''முழுதும் தமிழ்ப் பாட்டாகவே பாடத் தயாரா யிருக்கிறேன்'' என்று செம்மங்குடி சீனிவாசய்யர் சொல்வதிலிருந்து முழுமையும் தமிழ்க் கச்சேரியாகவே செய்யக்கூடிய அளவுக்குத் தமிழில் நல்ல கீர்த்தனங் கள் இருக்கின்றன என்று ஏற்படுகிறது. இல்லா விட் டால் செம்மங்குடி சீனிவாசய்யர் அவ்விதம் ஒத்துக் கொள்ள மாட்டார். பணத்துக்காகச் சங்கீதத்தை

விற்பதை ஆட்சேபிக்கிறவர், பணத்துக்காகத் தமிழ்ப் பாட்டுக் கச்சேரி செய்கிறேன் என்று முன்வரமாட்டார். ''தமிழில் நல்ல கீர்த்தனங்கள் இருக்கின்றன ; தமிழ்ப் பாட்டாகவே பாடி உயர்ந்த கச்சேரி செய்யலாம்'' என்று பரிபூரணமாக நம்புவதினாலேயே அவர் அவ்விதம் ஒத்துக் கொண்டிருக்கிறார்.

இவ்வளவு தூரம் ஒத்துக்கொண்ட செம்மங்குடி சீனிவாசய்யர், தமிழிசை இயக்கத்தின்மேல் அநாவசியமான புகார் சொல்ல முற்பட்டதுதான் ஆச்சரியத்தை அளிக்கிறது. அவ்வளவு தமிழ்ப் பாட்டுக்கள் இருக்கும்போது, தமிழாகவே கச்சேரி செய்வதும் சாத்தியமாயிருக்கும்போது, தமிழ்ப் பாட்டுப் பாடக்கூடாது என்று வித்வான்களைக் கட்டாயப்படுத்திய மியூஸிக் அகாடமியின் சங்கீத பண்டிதர்கள் மீது அவர் உண்மையில் புகார் சொல்லி யிருக்கவேண்டும்.

தமிழிசை இயக்கத்தினால் ஏதாவது கெட்ட பலன்கள் ஏற்பட்டிருக்குமானால், அதற்குப் பூரண பொறுப்பாளிகள் மேற்படி மியூஸிக் அகாடமி பண்டிதர்களே யாவார்கள். ''சங்கீதத்தின் தரம் குறையாமல் தமிழ்ப் பாட்டுக்களையும் அபிவிருத்தி செய்கிறோம்'' என்று அகாடமி தீர்மானம் செய்திருக்கும் பட்சத்தில், பழைய காலத்துச் சிறந்த தமிழ் ஸாஹித்யங்களைச் சேகரிக்கவும் பிரபலப் படுத்தவும் அகாடமி நியாயமான முயற்சி எடுத்திருக்கும் பட்சத்தில், தமிழிசை இயக்கமே தோன்றி யிராது. தோன்றி யிருந்தாலும் இவ்வளவு பலம் பெற்றிராது.

தமிழிசை இயக்கத்தில் ஏதோ அரசியல் நோக்கம் இருப்பதாகவும், அதனால்தான் அவ்வியக்கத்துக்குத் தம்முடைய மேலான ஆதரவைக் கொடுக்க முடியவில்லை யென்றும் செம்மங்குடி ஐயர்வாள் சொல்கிறார். அப்படித் தமிழிசை இயக்கத்துக்குள் புகுந்து கொண்டு நம்மை ஏமாற்றும் அரசியல் நோக்கம் என்ன வென்பதை அவர் சொல்லவில்லை. ஏதாவது இருந்தால்தானே சொல்லப் போகிறார்? அரசியல் நோக்கம் என்று யாரோ சொன்னதை அவர் திருப்பி ஒப்பிக்கிறாரே தவிர வேறில்லை.



தமிழிசை இயக்கத்தின் முக்கியமான பிரமுகர் ஒருவரே அதன் அரசியல் நோக்கத்தை வெளிப்படுத்தி யிருப்பதாக நமது வித்வான் சொல்லி யிருக்கிறார். ஆனால் அந்த முக்கியமான பிரமுகர் யார் என்று சொல்லவில்லை. அப்படி ஒருவரும் சொன்னதே கிடையாதென்று நான் சொல்கிறேன்.

ஒரு வேளை ஸ்ரீ. ஈ. வே. இராமசாமி நாயக்கரைச் செம்மங்குடி குறிப்பிடும் பட்சத்தில், அது பொய்யாகும். ஏனெனில், ஸ்ரீ. ஈ. வே. ரா. தமிழிசை இயக்கத்தைச் சேர்ந்தவரே அல்ல. அவுரங்கஜீப்பைப்போல் ஈ. வே. ராவும் சங்கீதத்துக்கே பரம விரோதி.

அப்படியே தமிழிசை இயக்கம் 'அரசியல் நோக்கம்' கொண்டதா யிருக்கட்டும் ; அக் காரணத்தினால் செம்மங்குடிக்கு அது பிடிக்காமல் போகட்டும். இவரும் இவருடைய சகாக்களும் மியூஸிக் அகாடமி பண்டிதர்களைச் சரிப்படுத்தி, அகாடமியின் மூலம் நல்ல முறையில் தமிழ் ஸாஹித்யங்களை வளர்க்கவும் பெருக்கவும் முயல்வது தானே? யார் வேண்டா மென்றார்கள்?

செம்மங்குடியின் பிரசங்கத்தில் மிகவும் முக்கிய மான அம்சம் ஸாஹித்யத்தையும் சங்கீதத்தையும் பற்றியது. "நாங்கள் சங்கீத வித்தையை அப்பியசித்த போது ஸரிகம பதநி என்னும் ஸப்த ஸ்வரமாகிய பாஷையைத்தான் கற்றோம்; ஸாஹித்ய பாஷைகளைக் கற்கவில்லை" என்று அவர் கூறியுள்ளார். செம்மங்குடியைப் பொறுத்த வரையில் இது முக்காலும் உண்மையாகும். அவருடைய சங்கீதம் பிரபலமடைய ஆரம்பித்த சமயத்தில் அவர்,

"ஜீவ ஜீவ ஜீவ என ராதா!" என்று பாடியது பிரசித்தமானது. அப்புறம், தமிழில் பாரதி பாடல்கள் முதலியவை பாடத் தொடங்கிய பின்னர் ஸாஹித்யத்திலும் சிறிது கவனம் செலுத்தத் தொடங்கினுர் என்பதும் உண்மைதான்.

ஆனுல் அவர் விஷயத்தில் உண்மையா யிருப்பதாலே, எல்லாக் கர்நாடக சங்கீத வித்வான்களையுமே அப்படி ஸாஹித்ய ஞான சூன்யங்கள் என்று அவர் சேர்த்துக் கூறுவதை நான் ஆட்சேபிக்கிறேன். ஸாஹித்யத்தில் பூரண கவனம் செலுத்தி, அக்ஷர சுத்தத்துடனும் இருதய பாவத்துடனும் பாடிய மகா வைத்தியநாதய்யர் முதலிய மகான்களைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறோம். வீணை தனம்மாளும் அவருடைய குமாரிகளும் அவ்விதம் பாடி யிருக்கிறுர்கள். தற்கால வித்வான்களுக்குள் முசிரி சுப்பிரமண்ய ஐயர் அக்ஷரப் பிழையுடனே அர்த்தம் தெரியாமலோ எந்தப் பாட்டையும் பாடுவது கிடையாது.

இன்னும், செம்மங்குடி தம்முடைய குறையையே சங்கீதத்தின் மேன்மையாக்கி, "ஸாஹித்யம் அவ்வளவு முக்கியமானதல்ல" என்று கூறுவதையும் நான் ஆட்சேபிக்கிறேன். "ஒன்று ஸாஹித்யமே இல்லாமல் பாடுங்கள்; அல்லது ஸாஹித்யம் பாடுவதா யிருந்தால் சரியாகத் தெரிந்துகொண்டு பாடுங்கள்" என்று கேட்க ரஸிகர்களுக்கு உரிமை உண்டு.



ஸாஹித்யம் அவ்வளவு முக்கியமற்றதா யிருந்தால், ஸ்ரீ தியாகப் பிரம்மத்துக்கு இவ்வளவு மகிமை ஏற்பட்டிராது. அவருடைய இராம பக்தியின் சிறப்பைக் குறித்துப் பேசவேண்டிய அவசியமே இல்லை. அவருடைய மெட்டுக்களை மட்டும் வைத்துக்கொண்டு ஸாஹித்யங்களைத் தள்ளி விடலாம்.

பேச்சின் நடுவில் எவ்வித சம்பந்தமோ பொருத்தமோ இல்லாமல், "தமிழிசைக்காரர்கள் பள்ளிக் கூடங்களில் தமிழை அதிகமாகப் படிக்க ஏற்பாடு செய்வது தானே?" என்று செம்மங்குடி கேட்கிறுர். தமிழிசை அன்பர்கள் பெரும்பாலும் தமிழ் அன்பர்களும் கூடத்தான். தமிழை எல்லா வகையிலும் வளர்க்க அவர்கள் முயற்சி செய்து கொண்டுதா னிருக்கிறுர்கள்.

ஆனுல் செம்மங்குடி இவ்விதம் சொல்லுவதின் அர்த்தம் என்ன? "செம்மங்குடி சீனிவாசய்யர் சங்கீதத்தைக் கட்டிக்கொண்டு ஏன் அழுகிறுர்? வேத பாராயணம் செய்யக் கூடாதா?" என்று கேட்டால், அதில் அர்த்தம் உண்டா? அல்லது, "செம்மங்குடி ஏன் வாய்ப்பாட்டுப் பாடுகிறுர்? மோர்சிங் அல்லது பிடில் வாசிக்கக் கூடாதா?" என்று கேட்டால், அதில் தான் அர்த்தம் இருக்குமா? தமிழிசைக்காரர்களைப் பார்த்து "மற்ற வழிகளில் தமிழை வளருங்கள்!"

என்று சொல்லுவதும் அவ்வளவு அர்த்தமான விஷயந்தான்.

"**ஸாமகான விநோதினி**" நிரவலைப்பற்றி எழுதிய நாளிலிருந்து, அடிக்கடி பேச்சிலும் எழுத்திலும் நிரவலைப்பற்றிப் பிரஸ்தாபம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. செம்மங்குடியும் நிரவலைப்பற்றிப் பேசியிருக்கிறார். "கீழேயிருந்து மேலே தடாலென்று பாய்வது நிரவல் ஆகாது" என்று கூறுகிறார். ஆனால் யார் அப்படிப் பாய்கிறார்கள் என்று சொல்லவில்லை. வீணை தனம்மாளும் பிடில் கோவிந்தசாமிப் பிள்ளையும் நிரவலை அருமையாகக் கையாண்டார்கள் என்று சொல்கிறார். ஒத்துக் கொள்கிறோம். ஆனால் அவர்களுடன் நிரவல் கலையும் மாண்டு விட்டதா, இப்போது யாராவது நல்ல முறையில் நிரவலைக் கையாளுகிறவர்கள் உண்டா என்று அவர் சொல்லவில்லை. இருக்கிறவர்களைப் பற்றிச் சொன்னால் இளம் பாடகர்கள் பின்பற்றுவதற்குச் சௌகரியமா யிருக்குமே?

கடைசியாக, பத்திரிகைகளில் வரும் சங்கீத விமரிசனங்களைப் பற்றிச் செம்மங்குடி தமது கோபத்தை வெளிப்படுத்தி யிருக்கிறார். தமிழ் நாட்டுப் பத்திரிகைகளில் பத்து வருஷத்துக்கு மேலாகச் சங்கீத விமரிசனங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அப்போதெல்லாம் செம்மங்குடி பத்திரிகை விமரிசனங்களை ஆட்சேபிக்கவில்லை. இப்போதுதான் ஆட்சேபிக்கிறார். அதற்குக் காரணமும் இருக்கிறது. முன்னெல்லாம் செம்மங்குடியின் பாட்டைக் குறித்துப் பிரமாதமான விமரிசனங்கள் பத்திரிகைகளில் வெளியாகும். அவருக்குச் சாரீர



வசதி குறைந்த பிறகு, அவ்விதம் வருவதில்லை. மற்ற வித்வான்களுடைய பாட்டு நன்றாயிருக்கிறது என்று படிக்கும்போது சீனிவாசய்யருக்குக் கோபமும் எரிச்சலும் பொங்கிச் சங்கீத விமரிசனமே கூடாதென்று தோன்றுவது சகஜந்தான்.

செம்மங்குடிக்குப் பிடிக்காவிட்டால், அவர் வேணுமானால் விமரிசனங்களைப் படிக்கவேண்டாம். அதற்காகப் பத்திரிகைக்காரர்களுக்கு உலகெங்கும் உள்ள ஓர் உரிமையை அவர் பறிக்க விரும்புவது நியாயமாகாது; முடியவும் முடியாது.

அதைக் காட்டிலும், சங்கீதத்தைப்பற்றிப் பேசுவதை நிறுத்துவது மிகவும் முக்கியமானது என்று நான் கருதுகிறேன். வீணை தனம்மாள் கூட "சங்கீதத்தைப் பாடவேண்டும்; கேட்கவேண்டும்; **சங்கீதத்தைப் பற்றிப் பேசக்கூடாது**" என்று சொல்லுவார் என்பதாகச் செம்மங்குடி அன்றையப் பிரசங்கத்திலேயே கூறியிருக்கிறார். "சுதேசமித்திரன்" ரிப்போர்டின்படி வீணை தனம்மாளின் இந்த உத்தமமான உபதேசத்தைச் செம்மங்குடியும் மற்ற வித்வான்களும் கடைப்பிடித்தால் சர்வ சிலாக்யமா யிருக்கும்.

"சங்கீதத்தைப்பற்றி எழுதக்கூடாது" என்று வீணை தனம்மாள் சொல்லவில்லை யென்பதையும் கவனிக்கவேண்டும். "பேசக்கூடாது!" என்று தான் சொல்லியிருக்கிறார். தகுந்த காரணத்துடன் தான் சொல்லியிருக்கிறார். எழுதுகிறவன், தான் எழுதுகிறது அச்சில் நிரந்தரமாக வரப்போகிறது, அதில் குறைகள் இருந்தால் நாலுபேர் எடுத்துக் காட்டுவார்கள், தன்னு

டைய எழுத்துக்கு மதிப்பு இராது என்பதை உணர்ந்து நிதானமாக எழுதுகிறான். ஒரு தடவைக்கு நாலு தடவையாகப் பார்த்து அச்சுப் போடுகிறான். ஆனால், பேசுகிறவனுக்கோ இந்த நிர்ப்பந்தம் கிடையாது. எதிரிலிருப்பவர்கள் திருப்தியடையும்படி எதையாவது உளறிக் கொட்டத் தோன்றி விடுகிறது. பேச்சுக்குத் தங்கு தடையிருப்பதில்லை.

ஆகவே, சங்கீதத்தைப்பற்றிய பேச்சைத் தான் முதலில் நிறுத்தவேண்டும். பேச்சு நின்றால், பிதற்றலும் நிற்கும். விவகாரங்களும் விவாதங்களும் நின்று விடும். முக்கியமாக, சங்கீதத்தைப் பற்றிய விவாதங்கள் கட்டாயம் நின்று விடும்.

பிறகு, உண்மையான சங்கீத வளர்ச்சி ஏற்படும் மார்க்கத்தை எல்லாருமாகச் சேர்ந்து தேடலாம்.

## பரமசிவனுக்குத் தான் தெரியும்

சங்கீத சபைகளில் டிக்கெட் வைத்து சங்கீதக் கச்சேரி நடத்தும் வழக்கத்தைப்பற்றிச் சமீபத்தில் ஒரு வாதம் எழுந்தது.

தமிழ் நாட்டில் உள்ளவை போன்ற சங்கீத சபைகளும், டிக்கெட் வைத்துக் கச்சேரி நடத்தும் வழக்கமும் வட இந்தியாவிலே கிடையாது.

அதாவது வெகு சமீபகாலம் வரையில் இல்லை! இப்போதுதான் தமிழ் நாட்டிலிருந்து இந்த ஏற்பாடு வடக்கே போயிருக்கிறது.

சரியோ, தவறோ, தமிழ் நாட்டுக்கே சிறப்பாக உரிய இந்த ஏற்பாடு எப்போது ஆரம்பமாயிற்று ?

ஏதோ அறுபது வருஷம். நூறு வருஷத்துக்கு உட்பட்டதா யிருக்கும் என்று இதுவரை நினைத்திருந்தேன்.

தமிழ் நாட்டில் சுமார் ஆயிரத்து நூறு வருஷ காலமாகப் பணங் கொடுத்துப் பாட்டுக் கேட்கும் வழக்கம் உண்டு என்று சில நாளைக்கு முன்புதான் தெரிய வந்தது.

இதற்கு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அத்தாட்சி கூறுகிறார்.

முதன் முதலாகத் தமிழ்நாட்டில் பணங் கொடுத்துப் பாட்டுக் கேட்டவர் யார் தெரியுமா ?

சாக்ஷாத் பரமசிவனேதான் !

அதிலும், அவர் காசு கொடுத்துக் கேட்டது தமிழிசைதானும்!

"தெரிந்த நான்மறையோர்க்
கிடமாய திருமிழலை
இருந்துநீர் தமிழோ டிசைகேட்கும்
இச்சையாற் காசுநித்தம் நல்கினீர்!"

என்று திருவீழிமிழலைப் பதிகம் எட்டாவது பாசுரத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி அருளியிருக்கிருர்.

அந்தக் காலத்தில் சிவபெருமான் தமிழிசை கேட்டதற்காகக் கொடுத்த காசு, **பொற் காசு**! இந்த நாளில் நாம் கொடுக்கும் காசு, **கடிதாசு**! அவ்வளவுதான் வித்தியாசம்.

தமிழிசை ஒரு நாள் கேட்டதோடு சிவபெருமான் திருப்தி யடைந்து இருந்து விட்டாரா? இல்லை. நித்தம் நித்தம் காசு கொடுத்து டிக்கெட் வாங்கிக் கொண்டு போய்க் கேட்டார்! தமிழோடு சேர்ந்த இசை அவ்வளவாக அவரைக் கவர்ந்திருந்தது!

சிவபெருமான் அவ்விதம் காசு கொடுத்துத் தமிழிசை கேட்ட இடம் எது? நாலு வேதங்களையும் ஓதி உணர்ந்த மறையோருக்கு இருப்பிடமான திருவீழிமிழலை என்னும் ஊர். வேத கோஷங்களுக்கு மத்தியில் தமிழிசையையும் பெருமான் கேட்டு அனுபவித்திருக்கிருர்!

இப்படி யெல்லாம் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனுர் சொல்லி யிருப்பதிலிருந்து, அந்த நாளில் நமது முன்னோர்கள் தமிழிசையை எவ்வளவாக மதித்தார்கள் என்பது நன்கு தெரிகிறது.



"சங்கீதம் முக்கியமா? சாஹித்யம் முக்கியமா?" என்கிற விவாதமும் பழந்தமிழ் நாட்டில் இருந்திருப்பதாகத் தெரிகிறது. இரண்டாயிரம் வருஷத்துக்கு முனுல் திருவள்ளுவர் காலத்திலேயே இருந்திருக்கிறது.

"பண் என்னும், பாடற்கு
இயை பின்றேல்?......"

என்று கேட்கிருர் பொய்யாமொழிப் புலவர்.

அதாவது, "பாடலின் பொருளுக்குப் பொருத்தமாய் அமையாத பண்ணினுல் என்ன பிரயோஜனம்?" என்கிருர்.

இந்தக் காலத்துப் பாஷையில் "சாஹித்யத்துக்குப் பொருத்தமாய் அமைக்காத ராகத்திஞல் என்ன பிரயோஜனம்?" என்று நாம் தர்ஜமா செய்யலாம்.

இந்தக் காலத்தில் நாம் 'ராகம்' என்று எதைச் சொல்லுகிருேமோ, அதைத்தான் 'பண்' என்று நமது முன்னோர்கள் சொன்னுர்கள்.

சங்கீதத்தில் சாஹித்யந்தான் ஜீவன் என்பதை ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனுரும் இன்னோரிடத்தில் வற்புறுத்தி யிருக்கிருர்.

"பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்!
பழத்தினிற் சுவை ஒப்பாய்!"

என்று பரமசிவனைப் பார்த்து ஸ்ரீ சுந்தரர் பாடியிருக்கிருர்.

பழத்தில் எது முக்கியமான அம்சம்? அழகா? சுவையா? பழத்தின் அழகைப் பார்த்தே திருப்தியடை

றவர்கள் சிலர் இருக்கலாம்; ஆனால் பெரும்பாலோருக்குப் பழத்தின் சுவைதான் பிரதானமாயிருக்கும்.

"பழத்தில் சுவை போன்றது, சங்கீதத்தில் சாஹித்யம்" என்கிறார் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார்.

அவருக்கு சாஹித்யம் என்றால் தமிழ் சாஹித்தியந்தான்! அதாவது தாய்மொழி சாஹித்யந்தான்!—அதனாலேயே "பண்ணிலே தமிழ் நீ!" என்று பரமசிவனைத் துதிக்கிறார்.

ஆஹா! நமது முன்னோர்கள்தான் தமிழையும் இசையையும் எப்படி யெல்லாம் போற்றி யிருக்கிறார்கள்!

அந்த முன்னோர்கள் சந்ததியில் வந்த நம்மில் சிலர் இன்று தமிழிசையை வெறுப்பது ஏன்? அந்தப் பரமசிவனுக்குத்தான் தெரியும்!

# ஸர் சி. பி.யின் அபிப்பிராயம்

யாருடைய அபிப்பிராயங்களாவது தவறாகவும் கோணலாகவும் இருந்தால் அவர்களைச் சீர்திருத்துவதற்கு ஒரு நல்ல வழியை நான் கண்டுபிடித்திருக்கிறேன். அதாவது, அப்படிப்பட்ட ஆசாமியைப் பிடித்து வைஸ்ராய் நிர்வாக சபையில் ஓர் அங்கத்தினராகச் செய்யவேண்டியது. அவர் அங்கத்தினராகிச் சில நாளைக்குள் சண்டை போட்டுக்கொண்டு வெளியிலும் வந்துவிடவேண்டியது. அப்புறம் பாருங்கள், அவருடைய அபிப்பிராயம் என்னமாதிரி நல்ல வழிக்கு வருகிறது என்று!

யாரை மனதில் வைத்துக்கொண்டு இதையெல்லாம் நான் சொல்கிறேன் என்பதை நேயர்கள் ஊகித்திருப்பார்கள். அவர்தான்; ஸர் சி. பி. ராமஸ்வாமி ஐயர்தான்.

* * *

கலைகளை நல்ல முறையில் வளர்ப்பதன் மூலமாக உலகத்தையே சீர்திருத்தி உருப்படச் செய்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் தொண்டு செய்து வருபவர்களில் அடையாறு ஸ்ரீமதி ருக்மணி தேவி ஒருவர். சென்ற சில வருஷமாக அடையாறு கலா க்ஷேத்திரத்தில் பரதநாட்டியக் கலை பிரதான ஸ்தானத்தை வகித்து வந்தது. இந்த வருஷத்திலிருந்து கர்நாடகச் சங்கிதத்தை நல்ல முறையில் வளர்க்கும் தொண்டையும் கலாக்ஷேத்திரம் மேற்கொண்டிருக்கிறது. சென்னை யுனிவர்ஸிடி

யாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சங்கீத சிரோமணி வகுப்பை நடத்தும் பொறுப்பைக் கலாக்ஷேத்திரம் ஏற்றுக் கொண்டிருக்கிறது.

யுனிவர்ஸிடிகளின் விஷயம் நமக்கு ஒருவாறு தெரிந்ததுதான். யுனிவர்ஸிடியினால் அமைக்கப்பட்டிருக்கும் பாடங்கள் பெரும்பாலும் அபத்தமாயும், காரியத்துக்கு உதவாத ஏட்டுச் சுரைக்காயாகவும் இருப்பது வழக்கம். எனவே, யுனிவர்ஸிடி பாடங்களைக் கடலுக்காகத் தொலைத்த பிறகு, உண்மையான சங்கீதத்தையும் மேற்படி சிரோமணி வகுப்பு மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பார்களென்று நம்புகிறேன்.

"கலை விஷயங்களில் பழமையானதுதான் மேன்மையானது" என்று ஒரு கொள்கை உண்டு. ஸ்ரீமதி ருக்மணி தேவி பழமைப்பற்று மிகுந்தவர் என்பது பிரசித்தம். நவீன ஆபரணங்கள் நாளுக்கொன்றாக வந்து கொண்டிருந்த காலத்தில், ஸ்ரீமதி ருக்மணி தேவி தைரியமாகக் கையில் வங்கியும் காலில் கொலுசும் அணிந்துகொண்டு நடனமேடைக்கு வந்து எல்லாரையும் திகைக்கச் செய்தார்.

இன்னும் அவருடைய பழமைப்பற்றை அறிய வேண்டுமானால், இந்த வாரத்தில் அடையாற்றில் நடக்கும் கச்சேரிகளைக் கொண்டு அறியலாம். டைகர் வரதாச்சாரியார், மைசூர் வாஸுதேவாச்சாரியார், மழவராயனேந்தல் சுப்பராம பாகவதர் ஆகிய பழங்கிழவர்களைக் கொண்டு சங்கீதக் கச்சேரிகள் ஏற்படுத்தியிருக்கிறார்.

ஆனால், பழமைப்பற்றுமட்டும் இருந்தால் போதுமா? போதாது. பழமையே போதுமென்றிருந்தால் கலை வளர்ச்சியே இல்லாமல் போய்விடும். பழமையானது அடிப்படையாக இருக்கவேண்டும். அந்த அடிப்படையின் மேல் புதிய புதிய முறைகளில் கலை மாளிகைகளை அமைக்கவேண்டும். பரதநாட்டியக் கலைக்கு இந்தத் திருப்பணியை ஸ்ரீமதி ருக்மணி தேவி செய்து வருகிறார். பழமையை அடிப்படையாக வைத்துக்கொண்டு புதுமைகளைப் புகுத்தி வருகிறார். அதேவிதமான தொண்டைக் கர்நாடக சங்கீதத்திற்கும் அவர் செய்வார் என்று எதிர்பார்க்கிறேன்.



* * *

கலா க்ஷேத்திரத்தில் சங்கீத சிரோமணி வகுப்பை ஆரம்பித்துவைத்த ஸர் சி. பி. ராமஸ்வாமி ஐயர் மேற்படி அபிப்பிராயத்தை வெளியிட்டிருப்பது அறிந்து மகிழ்கிறேன். "கர்நாடக சங்கீதம் நமது அபூர்வமான பிதிரார்ஜித செல்வம். ஆனால் அதை அப்படியே பொத்திப் பொத்தி வைத்துத் துருப்பிடிக்க விடக்கூடாது. புதிய முறைகளில் வளர்க்கவேண்டும்" என்று ஸர் சி. பி. ராமஸ்வாமி ஐயர் கூறினார்.

இதை ஆமோதித்துப் பேசிய மகாகனம் சீனிவாச சாஸ்திரியார், "உண்மைதான்; கர்நாடக சங்கீதத்தைப் புது முறைகளில் வளர்க்க வேண்டியதுதான். ஆனால் இந்த சங்கீத வித்வான்கள் இருக்கிறார்களே, இவர்கள் வெகு பிடிவாதக்காரர்கள். பழைய வழியிலிருந்து இவர்களை அசைப்பது பிரம்மப் பிரயத்தனம்" என்றார்.

சாஸ்திரியாரின் கூற்றில் ஓரளவு உண்மை இருக்கிறது.

ஆனால் எல்லா சங்கீத வித்வான்களையும் பற்றி இவ்விதம் சொல்வதற்கில்லை. இந்நாளில் ஆங்கிலக் கல்வி கற்று பி. ஏ. பட்டம் பெற்றவர்கள் சங்கீதத் துறைக்கு வருகிறார்கள். நவீனக் கல்வி இல்லாதவர் களிலும் புதிய முறையில் தைரியமாகப் பிரவேசிக்கக் கூடியவர்கள் இருக்கிறார்கள்.

உதாரணமாக, அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் இருக்கிறார். நமது சங்கீதக் கச்சேரிகளுக்கு ஒரு புதிய பாணியை அமைத்துக் கொடுத்த பெருமை அவருடை யது. முப்பது வருஷமாகச் சங்கீதத் துறையில் உழைத் தும், நேற்றுவந்த இளம் வித்வானைப்போல் உற்சாகத் துடன் புதிய முறைகளை அவலம்பிக்கும் சக்தி அய்யங் காரிடம் இருக்கிறது.

எனவே, ஸர் சி. பி. மகாகனம் சாஸ்திரியார் போன்றவர்கள் தகுந்த வழியில் ஊக்கமளிக்கும் பட்சத் தில் புதிய முறைகளில் சங்கீதத்தை வளர்ப்பது அசாத் தியமாகாது.

கர்நாடக சங்கீதத்தைப் பற்றிய இன்னும் இரண்டு முக்கியமான பிரச்னைகளைப்பற்றி ஸர் சி. பி. திட்டமான அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார். அவை இரண்டும் சமீபத்தில் செம்மங்குடி சீனிவாசய்யர் கிளப்பிய பிரச்னைகள் ஆகும். சமஸ்தான வித்வான் கிளப்பிய பிரச்னைகளுக்கு சமஸ்தானத் திவானிடமிருந்தே தக்க பதில் கிடைத்திருக்கிறது.

**1. "கர்நாடக சங்கீதம் நாலு பேர் இரகசியமாகக் கூடி அநுபவிக்க வேண்டிய கலையா? அல்லது பொதுஜனங் கள் திரளாகக் கூடி அநுபவிக்கக் கூடியதா?" என்பது கேள்வி.**



"நாலுபேருக்குப் பாடுவதுதான் நல்ல சங்கீதம்; அதற்குமேல் கூட்டங் கூட்டிப் பாடுவது மட்டமான சங்கீதம்" என்ற அருமையான கருத்தைச் செம் மங்குடி வெளியிட்டார்.

இந்தக் கொள்கையைச் செம்மங்குடி சீனிவா சய்யர் தாம் அனுஷ்டிக்கவில்லையென்றாலும், அதை வெளியிட்டதிலிருந்து பொதுஜனங்களைப் பற்றிய அவ ருடைய அபிப்பிராயம் வெளியாயிற்று.

"நாலு பேர்" என்று செம்மங்குடி குறிப்பிடுவது யாரை என்றால், "உம்முடைய பாட்டுத்தான் பாட்டு; மற்றதெல்லாம் பாட்டே இல்லை, அழுகை!" என்று முகஸ்துதி செய்யும் சங்கீத விசிறிகளைத்தான்.

ஆனால் ஸர் சி. பி. இந்தக் கருத்தைக் கண்டிப் பாக மறுக்கிறார். "சங்கீதக் கலை எல்லாரும் அநுப விக்க வேண்டியது. கர்நாடக சங்கீதத்தை இன்னும் பொதுஜனங்கள் ஏராளமாக அநுபவிக்கும்படி அதை விஸ்தரித்து மேன்மைப்படுத்த வேண்டும்" என்று கூறுகிறார்.

இதுதான் சரியான கொள்கை என்பதில் எள்ளள வும் ஐயமில்லை.

சங்கீதம், நாடகம், நாட்டியம் முதலிய கலைகள் ஏதோ திருட்டுத்தனமாகக் கதவைச் சாத்திக்கொண்டு அநுபவிக்க வேண்டிய கலைகள் அல்ல. சங்கீதச் சபை களில் எவ்வளவுக்குக் கூட்டம் அதிகமாகிறதோ அவ் வளவுக்குச் சபையில் ஒவ்வொருவருடைய சங்கீத அநுபவமும் அதிகமாகிறது.

எனவே அதிகமான ஜனங்கள் கேட்கக் கேட்கத் தான் சங்கீதக் கலை உயரும்.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமியிடம் சிலர் வந்து, "தஞ்சாவூர் ராஜா உம்முடைய சங்கீதத் திறமையைப்பற்றிக் கேள்விப்பட்டுச் சந்தோஷமடைந்திருக்கிறார். மகாராஜாவிடம் நீர் போனால் நல்ல சன்மானம் கிடைக்கும்" என்றார்கள். அதை ஸ்ரீ தியாகய்யர் மறுத்து, "நிதி(த்) ஸால சுகமா?" என்று கீர்த்தனம் பாடியது பிரசித்தம்.

அப்படி இராஜ சன்மானத்தை வெறுத்த தியாகராஜர் தெருக்களில் கையில் தம்பூராவுடன் பக்தி பரவசமாய்ப் பாடிக்கொண்டே உஞ்சவிருத்தி எடுத்தார். வீதியில் ஜனங்கள் கூட்டங்கூடி அவருடைய திவ்ய கீர்த்தனங்களைக் கேட்டு ஆனந்தித்தார்கள்.

அப்படிப்பட்ட தியாகய்யரின் கீர்த்தனங்களைப் பாடுகிற வித்வான்கள், பொதுஜனங்களைப் பற்றி, "அவர்களுக்குச் சங்கீதம் என்ன தெரியும்?" என்று அவமதிப்பது பெரும் பிசகாகும்.

பழைய காலத்தில் ராஜாக்கள் சங்கீதத்தை வளர்த்தார்கள் என்று சொல்லுவதெல்லாம் பெருந் தவறு. பழைய காலத்து ராஜாக்களினால் சங்கீதத்தில் சிருங்கார ரஸ அம்ஸம் அளவுமீறி வளர்ந்து குட்டிச் சுவராயிற்று.

இந்தக் காலத்தில் சில சமஸ்தான மன்னர்கள் சங்கீதத்தை நல்ல முறையில் வளர்க்கிறார்கள். ஆனால் அவர்களும் பொதுஜன அபிப்பிராயத்துக்கு மதிப்புக் கொடுத்தே சங்கீதத்தை வளர்க்கிறார்கள். முதலில் பொதுஜனங்களிடையில் பாடி அவர்களுடைய ஆதரவை நன்கு பெற்றிருக்கும் வித்வான்களைத்தான் சமஸ்தானங்களில் ஆஸ்தான வித்வான்களாகச் செய்கிறார்கள்.



இதையெல்லாம் நன்கு யோசித்துப் பார்க்கும் எந்த வித்வானுக்கும் பொதுஜனங்களைப்பற்றி அலட்சியமாகப் பேசத் தோன்றாது.

**2. "சங்கீதம் கேட்கும் பொதுஜனங்களுக்குச் சங்கீதத்தைப்பற்றி விமரிசனம் செய்யும் பாத்தியதை உண்டா? இல்லையா?" என்பது இரண்டாவது கேள்வி.**

"திவ்யமாய் உண்டு. ஏனெனில், அவர்களுக்கும் காது இருக்கத்தானே செய்கிறது?" என்று ஸர் சி. பி. விடை கூறியிருக்கிறார்.

இந்த விடைக்கு ஒரு சிறு திருத்தம் மட்டும் செய்ய விரும்புகிறேன்.

அந்தக் காதானது கர்நாடக சங்கீதத்தை அடிக்கடி கேட்டு, பலரிடமும் கேட்டு, பண்பட்ட காதாயிருக்க வேண்டும்.

"வித்வானுக்குத் தெரிந்ததைவிட விமர்சகருக்கு நூறு பங்கு தெரிந்திருக்க வேண்டும்" என்பது அர்த்தமற்ற பேச்சு!

அல்லது வித்வான்களைப்போல் விமரிசகரும் சரளி வரிசையில் ஆரம்பித்துப் பல்லவி ஸ்வரம் வரையில் பாடம் பண்ணியிருக்க வேண்டுமென்று சொல்வதும் அசம்பாவிதம்.

அம்மாதிரி சங்கீத வித்தையை அப்பியசித்தவர்கள் தாங்களே வித்வான்களாகி விடுவார்கள். அவர்கள் எந்தக் கச்சேரியையும் விமரிசனம் செய்ய முடியாது.

வேறு எந்த வித்வானுடைய பாட்டையும் நல்ல பாட்டு என்று அவர்களால் ஒப்புக்கொண்டாலும், செத்துப்போன வித்வான்களின் பாட்டைத்தான் ஒப்புக்கொள்வார்கள்.

அவர்கள் தங்கள் சங்கீத 'பாணி' ஒன்றுதான் சரியான பாணி என்றும், மற்றதெல்லாம் சப்பாணி என்றும் கருதுவார்கள்.

பல வித்வான்களுடைய பாட்டையும் கேட்டுப் பழகிய ரஸிகர்களால்தான் சரியான முறையில் சங்கீத விமரிசனம் செய்ய முடியும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

ஸர் சி. பி. சங்கீத சம்பந்தமாக வெளியிட்ட சரியான கருத்துக்களுக்காக அவரைப் பாராட்டுகிறேன். அவர் பிரஸ்தாபியாமல்விட்ட விஷயத்துக்காக இன்னும் அதிகமாய்ப் பாராட்டுகிறேன்.

இந்தப் பிரசங்கத்தில் அவர் தமிழிசையைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. "சங்கீதத்துக்குப் பாஷை என்னத்துக்கு ?" என்ற கேள்வியையும் போடவில்லை.

சங்கீத சபைகளையும், விழாக்களையும் ஆரம்பித்து வைக்கிறவர்கள் இது விஷயத்தில் ஸர் சி. பி. யின் உதாரணத்தைப் பின்பற்றினால் சர்வ சிலாக்கியமாயிருக்கும்.



தியாகராயநகர் சங்கீத சபையைத் திறந்து வைத்த போது ஸ்ரீ புல்லா ரெட்டி ஒரு சிறந்த உண்மையை எடுத்துக் காட்டினார்.

"அவரவர்கள் இஷ்டம்போல் சங்கீதக் கலையை வளர்க்கட்டும். **எது நல்லதோ, எது சிறந்ததோ, அதுதான் நிலைத்து நிற்கும்.** வீண் விவாதம் என்னத்திற்கு ?" என்றார் புல்லா ரெட்டி.

ரொம்பவும் சரியான பேச்சு.

தாய்ப் பாஷையிலே பாட்டுக் கேட்க வேண்டுமென்று விரும்புகிறவர்கள் கேட்டுக் கொண்டு போகட்டும்.

மற்றவர்கள் அவர்களை எதிர்த்துக் குறைகூறி, "தாய் பாஷை விரோதிகள்" என்ற பட்டத்தைச் சூட்டிக் கொள்வானேன் ?

# மகத்தான கச்சேரி

"மகத்தான" என்னும் வார்த்தையை இப்போதெல்லாம் கொஞ்சம் தாராளமாகவே உபயோகப்படுத்திக்கொண்டு வருகிறோம். "மகத்தான பிரசங்கம்" என்கிறோம். "மகத்தான வெய்யில் என்கிறோம். "மகத்தான அசட்டுத்தனம்" என்கிறோம். நல்ல வேளையாய், சங்கீதக் கச்சேரிகளைப் பற்றி "மகத்தான" என்னும் வார்த்தையை அதிகமாக நாம் உபயோகப் படுத்துவதில்லை. அந்தவரையில் க்ஷேமந்தான்! ஏனெனில், சங்கீதக் கச்சேரிகளைக் குறித்து அடிக்கடி "மதத்தான கச்சேரி" என்று சொல்லி அந்த வார்த்தையைக் கெடுத்திருந்தோமானால், ஸெயிண்ட்மேரீஸ் ஹாலில் நடந்த மதுரை மணிக் கச்சேரியை வேறு எப்படிக் குறிப்பிடுவது என்று தெரியாமல் திண்டாடவேண்டி யிருக்கும்.

'பிரமாதம்' 'அபாரம்'—என்ற வார்த்தைகளையெல்லாம் வெகுதூரம் பின்னால் விட்டுவிட்டு மேலே போன கச்சேரி அது எனவே, அதை 'மகத்தான கச்சேரி' என்றுவது சொல்லாவிட்டால் ரஸிகர்களுடைய உள்ளம் திருப்தி யடையாது.

மதுரை மணி ஐயர் வாசஸ்பதி ராகம் பாடி, "பராத்பரா" என்ற கீர்த்தனத்தைப் பாடி,

"**அரிஅயனும் காணு அரியஜோதி**"

யில் நின்று நிரவல் செய்து, ஸ்வரப் பிரஸ்தாரத்தில் 'தத்தா' 'தத்தா' என்று தைவதத்தில் அடிக்கடி வந்து



நின்று பாடியபோது, கச்சேரி 'பிரமாதம்' என்று சொல்லக்கூடிய நிலைமையை அடைந்தது.

ஆபோஹி ராகம் ஆலாபனம் செய்து "**கிருபாநிதி**" என்ற அநுபல்லவி வார்த்தையில் நின்று ஸ்வரப்பிரஸ்தாரம் செய்தபோது கச்சேரி 'அபாரம்' ஆயிற்று.

பிறகு சங்கராபரண ராகத்தைக் கம்பீரமாகவும் விஸ்தாரமாகவும் ஆலாபனம் செய்து, "தூக்கிய திருவடி" கீர்த்தனத்தில், "**எத்தனையோ பிறவி**"யில் நின்று நிரவல் செய்தபோதுதான், கச்சேரி 'மகத்தான' தாயிற்று! அந்த நிரவலின் அழகையும் பிறகு தொடர்ந்துவந்த ஸ்வரப் பிரஸ்தாரத்தையும் பற்றி எத்தனை எத்தனையோ சொல்லலாம்! ஆனால், சொல்லாமல் விடுவதற்குக் காரணந்தான் எல்லாருக்கும் தெரியுமே?—இட கிராக்கிதான்.

கானகலாதரர் கடுமையான நோய்க்கு ஆளாகி, சங்கீத ரஸிகர்கள் பலரைப் பெரும் கவலைக் குள்ளாக்கினர். ஆனால், அவருக்கு வந்த சுரமானது அவருடைய உடலை மெலியச் செய்து, அதே சமயத்தில் அவருடைய தொண்டைக்கு அபாரமான வலிவையும் கம்பீரத்தையும் கொடுத்திருக்கிறது. குரலில் பழைய மதுரமும் குழைவும் சுருதியிலிருந்து அணுவளவும் பிறழாத் தன்மையும் அப்படியே இருக்கிறபடியால், எல்லாமாகச் சேர்ந்து அவரது சாரீரமானது இப்போது மாசு மறுவற்ற பத்தரை மாற்றுத் தங்கமாகப் பிரகாசிக்கிறது. அப்படிப்பட்ட சாரீரத்தின் சாகஸம் முழுவதையும் மேற்படி சங்கராபரணக் கீர்த்தன நிரவலில் அன்று பார்த்தோம்.

முக்கிய ராகம் பல்லவிக்கு மோகன ராகத்தை எடுத்துக்கொண்டார் மணி ஐயர். எத்தனையோ பாடகர்கள் மோகனம் பாடுகிறார்கள்; மணி ஐயரும் எத்தனையோ ராகம் பாடுகிறார். ஆனால் மணி ஐயருக்கும் மோகனத்துக்கும் ஒரு தனிப் பொருத்தம் இருக்கிறது. அவரிடம் அந்த ராகம் ஒரு தனிக் களை பெற்று விளங்குகிறது.

இந்தச் சமயத்தில் ஒரு விஷயம் குறிப்பிட விரும்புகிறேன். மணி ஐயரின் ராக ஆலாபனப் **பாணி**யைப் பற்றி 'துண்டு துண்டாக வெட்டிப் பாடுகிறார்' என்று சிலர் சொல்லுவதுண்டு. 'கல்கி'யிலேயே ஒரு தடவை இத்தகைய அபிப்பிராயம் வெளியாகியிருக்கிறது.

ஆனால் என் அபிப்பிராயம் இது விஷயத்தில் கொஞ்சம் வித்தியாசமானது. மணி ஐயர் துண்டு துண்டாக வெட்டி ஆலாபனம் செய்கிறார் என்பது உண்மையே. ஆனால் அவருடைய துண்டுகளுக்கும் மற்ற கற்றுக் குட்டிகளின் துண்டுகளுக்கும் வித்தியாசம் உண்டு. நல்ல ஒட்டு மாம்பழத் துண்டுகளுக்கும், தாடிப்பசந்து மாம்பழத் துண்டுகளுக்கும் உள்ள வித்தியாசந்தான்!

மணி அய்யர் துண்டு துண்டாக வெட்டி வெட்டிப் பாடினாலும் அந்தத் துண்டுகளின் மூலமாகவே ராகத்தின் முழு ஸ்வரூபத்தைக் கொண்டுவந்து விடுகிறார். அதோடு, ஒவ்வொருவராகத் துண்டும் அழகிய ஒரு சிறு நட்சத்திரம்போல் அமைந்து விடுகிறது.

வட்டம் ஒன்று போட வேண்டுமானால், தொடர்ச்சியான இடையருக ஒரே கோட்டினாலும் அந்த வட்டத்தைப் போடலாம். அல்லது தனித் தனிச் சிறு நட்சத்திரங்களின் மூலமாகவும் ஒரு வட்டத்தை அமைக்கலாம்.



நல்ல ராகபாவத்துடன் பாடுகிற உயர்ந்த வித்வான்கள் சாதாரணமாய் முதல் வட்டத்தைப்போல் ஆலாபனம் செய்வார்கள். மணி ஐயரின் ஆலாபனம் இரண்டாவது வட்டத்தைப்போ லிருக்கும்.

ராக ஸ்வரூபமே அமையாதபடி பிசிரு பிசிராகவும் கோணல் மாணலாகவும் கோடு இழுக்கிற பாடகர்களும் உண்டு.

போகட்டும்; மோகன ராகத்தின் உருவத்தை அபூர்வமான மோகன நட்சத்திர வடிவங்களினால் மணி ஐயர் காட்டியபிறகு, ராகமாலிகை ஸ்வரங்கள் அமிர்தவர்ஷமாகப் பெருக்கெடுத்தன. கானடா, கௌரிமனோகரி முதலிய ராகங்களின் ஸ்வரங்கள் மணி மணியாகவும் முத்து முத்தாகவும் உதிர்ந்தன.

முன்னெல்லாம், மணி ஐயரின் கச்சேரியில் ராகமாலிகை ஸ்வரமே சிகரமாக அமைவது வழக்கம். அதோடு கச்சேரியே முடிந்தமாதிரிதான். அப்புறம் அவர் பாடும் சில்லறை உருப்படிகள் அதிகமாக ரஸிகர்களின் உள்ளத்தைக் கவர்வதில்லை. இந்தக் கச்சேரி அந்த விஷயத்தில் முற்றும் மாறுபிருந்தது. பல்லவிக்குப் பிற்பாடு அவர் பாடிய பாடல்களில் சபையோரின் உற்சாகம் வரம்பு கடந்து பெருக்கெடுத்தது.

இதற்குக் காரணம் என்னவென்று யோசித்தேன். மணி ஐயர் இப்போதெல்லாம் தமிழ்ப் பாட்டுக்களில் அதிக கவனம் செலுத்திப் பாடத் தொடங்கியிருப்பதுதான் என்று தோன்றியது.

அன்றையக் கச்சேரி, தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் நடந்த தமிழிசைக் கச்சேரி என்று முன்னால் சொல்ல மறந்துவிட்டேன் போலிருக்கிறது. பாதகமில்லை; இப்போது சொல்லிவிடுகிறேன். ஆரம்பத்திலிருந்து கடைசிவரையில் அன்று மணி ஐயர் எல்லாம் தமிழ்ப் பாட்டுக்களாகவே பாடி ஜமாய்த்து விட்டார்!

தாய் மொழியிலே பாடுவது என்று ஏற்பட்டதும், ஸாஹித்யத்தின் வார்த்தைகளில் கவனம் செல்கிறது, அர்த்தம் மனதில் பதிகிறது; உச்சரிப்புச் சுத்தமாகிறது; வார்த்தைகளை விழுங்குவது நிற்கிறது; உள்ளத்தில் உணர்ச்சி உண்டாகிப் பாட்டோடு கலந்து விடுகிறது!

இப்படியெல்லாம் ஏற்பட்டுவிட்டதினால் மணி ஐயர் கச்சேரியின் கடைசிப் பாகமும் இப்போது அபாரமாய்ச் சோபிக்க ஆரம்பித்திருக்கிறது.

பல்லவி முடிந்ததும், இனிமையான வர்ணமெட்டில் அழகான தமிழ்ச் சொற்களைக் கொண்டு அமைந்த,

**"கந்தன்—கருணைபுரியும் வடிவேல்!"**

என்ற பாட்டை முதலில் மணி ஐயர் பாடினார். அந்தப் பாட்டின் முடிவில்,

**"அன்னை பராசக்தி அருள் சுடர் வேல்!"**

என்று பஞ்சமத்திலே நின்றபோது, சபையோரைக் குலுக்கிப் போட்டுவிட்டது. பிறகு "**தனித்தனி முக்கனி பிழிந்து**" என்ற பாடலைக் கேதாரகௌளம், ஹம்ஸானந்தி என்னும் இரு ராகங்களில் உருக்கமாகப் பாடினார். "**செந்தமிழ் நாடெனும் போதினிலே**" பாட்டில் சபையை வெறி கொள்ளும்படி செய்து விட்டார். "**எப்போவருவாரோ**"வும் அப்படியேதான்.



இவ்வளவு செந்தமிழ்ப் பாடல்களைக் கேட்ட பிறகு, "**பாமாலை**"யைக் கேட்காமல் சபையோர் கலைய மறுத்துவிட்டார்கள். நாலா பக்கமும் "பாமாலை!" "பாமாலை!" என்ற கூச்சல் எழுந்தது.

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரின் பேரில் பாபநாசம் சிவன் அமைத்த இந்தப் பாமாலைக் கிருதிதான் அன்றையக் கச்சேரியில் மகத்தான பாட்டாக அமைந்து விட்டது!

**"தமிழ்நாடு செய்தவப் பயனாய் வந்தவர்"**

என்ற இடத்தில் கானாமிர்த வர்ஷமாகப் பாடகர் நிரவல் செய்தபோது, "செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே" என்னும் பாரதியார் வாக்கின் உண்மையை இதுவரையில் உணராதவர்களும் உணர்ந்து கொண்டார்கள்.

**"வாழிய செந்தமிழ் வாழ்கநற் றமிழர்**
**வாழிய என்றும் நம் மணி ஐயர்!"**

என்று வாழ்த்திக்கொண்டே போனார்கள்.

# செம்பை செய்த அற்புதம்

சென்னையில் நடந்த சங்கீத விழாக்களில் இந்தத் தடவை எல்லாவிதத்திலும் சந்தேகமறச் சிறந்து விளங்கியது தமிழிசை விழாவாகும்.

கச்சேரி வரிசையின் அமைப்பிலும், கச்சேரிகள் நடந்த சிறப்பிலும், ரஸிகர் கூட்டப் பெருக்கிலும், அவர்களுடைய உபசரிப்பிலும்,—இன்னும் எல்லாவற்றிலும் தமிழிசை மேன்மை பெற்றிருந்தது.

தமிழிசையை இந்தத் தடவை ரேடியோக்காரர்கள் ஒலிபரப்பினார்கள். தமிழிசை மண்டப வாசலில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் நின்று ஒலிபெருக்கியின் மூலம் தமிழிசையைக் கேட்டு ஆனந்தித்தார்கள்.

* * *

தமிழிசை விழாவில் முதல் கச்சேரி செம்பை வைத்தியநாத பாகவதரின் கச்சேரிதான். அது முதல் தரக் கச்சேரியாகவும் எல்லாவிதத்திலும் முதன்மையான கச்சேரியாகவும் அமைந்துவிட்டது.

கேதாரத்தில் "சகல புவன நாயகா!" என்று எடுத்து கார்வை கொடுத்து ஜம்மென்று மேலே நிறுத்தியபோதே சபையில் கலகலப்பு உண்டாகி விட்டது. கச்சேரி இன்றைக்கு 'ஒண்ணும் நம்பர்' என்று தீர்மானம் ஆகிவிட்டது.

அப்புறம் கல்யாணி, மோகனம், ஸாவேரி, ஹம்ஸாநந்தி ஆகிய ராகங்களில், இதுவரை நாம்



கேளாத அழகிய தமிழ்க் கீர்த்தனங்களைப் பொழிந்தார். ஒவ்வொரு பாட்டுக்கும் சபையோர் கரகோஷத்தைப் பொழிந்தனர்.

மேற்படி அருமையான தமிழ்க் கீர்த்தனங்கள் செம்பையின் மூதாதையாகிய 'லலிதா தாஸ'ரால் இயற்றப்பட்டவை என்று அறிகிறேன்.

கச்சேரிகளின்போது அழுது வடியும் சுபாவம் எப்போதுமே செம்பையிடம் கிடையாது. அவருடைய கச்சேரிகளில் எப்போதும் குதூகலமும் கலகலப்புமாகவே இருக்கும். ஆனால், இந்தத் தமிழிசைக் கச்சேரியில் அவருக்கும் சபையோருக்கும் ஏற்பட்ட குதூகலம் மாதிரி இதற்குமுன் நான் பார்த்ததேயில்லை.

மோகன ராகத்தில் "இத்தினமே சுதினம்" என்னும் அழகான கீர்த்தனத்தைச் செம்பை அழுத்தந் திருத்தமாய்ப் பாடி முடித்தபோது, சபையோரும், "இத்தினமே சுதினம்" என்பதை அழுத்தந் திருத்தமாய்க் கரகோஷம் செய்து ஆமோதித்தனர்.

ஒரு விஷயத்தில் செம்பை வைத்திநாத பாகவதர் நம்மை அடியோடு ஏமாற்றி விட்டார்.

"செம்பையின் தமிழ் உச்சரிப்புக் கொஞ்சம் மலையாள பாணியாயிருக்கலாம்" என்று நாம் எச்சரித்திருந்தோம்.

இது விஷயத்திலேதான் சங்கீத சம்ராட் நம்மை ஏமாற்றிவிட்டார். (இந்த மாதிரி ஏமாற்றங்கள் எத்தனை நேர்ந்தாலும் நாம் ஆனந்தமாய் வரவேற்கிறோம் என்று சொல்ல வேண்டியதில்லை.)

தமிழ் நாட்டிலே பிறந்து வளர்ந்த வித்வான்களைக் காட்டிலும் செம்பை தமிழ் வார்த்தைகளைச் சுத்தமாக வும் தெளிவாகவும் கணீரென்றும் உச்சரித்துச் சபை யோரைப் பிரமிக்கச் செய்து விட்டார்.

தமிழ் நாட்டின் பிரபல வித்வான்களில், "காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே! என்னைக்—காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே!" என்று பாடுகிறவர்கள் இருக் கிறார்கள்.

"ஆடின தேபடியோ!— நடானம் — ஆடினதே ஏபடியோ!" என்றும், "எப்போ வாருவாரோ—எந்தன் —காலி தீர" என்றும் பாடுவதைக் கேட்டிருக்கிறோம்.

எனவே, செம்பை பாகவதர் தமிழ்ப் பாட்டுக்களை அப்பழுக்கில்லாமல் சுத்தமாய் உச்சரித்துப் பாடியதைக் கேட்டபோது சபையோர் அதை ஒரு அற்புதமாகவே கருதியதில் சிறிதும் வியப்பில்லை யல்லவா?

ஏழு தமிழ்க் கீர்த்தனங்கள் பாடி, தோடி ராக ஆலாபனம்—தானம்—பல்லவி எல்லாம் முறையாகப் பாடி, சில்லரை உருப்படிகள் பாடி, கடைசியில் "ஸ்ரீ ராமசந்திரனுக்கு ஜயமங்களம்" பாடி முடித்த போது, "தமிழிசைக்கு இசை அளிக்கக் கூடியவர் செம்பை வைத்தியநாத பாகவதர்தான்!" என்று சொல்லும்படி ஆகிவிட்டது.

தமிழிசை இயக்கத்தின் சரித்திரத்தில் மேற்படி காயன கந்தர்வரின் கச்சேரி ஒரு முக்கிய சம்பவம் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

தமிழிசை இயக்கம் செம்பை அவர்களின் தொண் டினால் இன்னும் பிரமாதமான சிறப்பும் மேன்மையும் அடையுமென்று எதிர்ப்பார்க்கிறேன்.

# எதிர்ப்பு விழ்ந்து விட்டது

தமிழ் இசை இயக்கத்தைப் பற்றி எனக்குக் கவலை வந்துவிட்டது. சென்ற சில வருஷ காலமாக அந்த இயக்கம் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்ததுபோல் இனிமேலும் ஓங்கி வளருமா என்பதுபற்றி ஐயப்பாடு தோன்றிவிட்டது.

ஒரு நல்ல இயக்கத்தின் வளர்ச்சிக்கு வேகம் கொடுப்பது, அதற்கு ஏற்படும் எதிர்ப்புக்கள்தான். தமிழிசை இயக்கத்திற்கு எதிர்ப்பு இப்படி விழுந்து போய்விட்டதே; இனிமேல் அதற்கு எந்த முறையில் பலம் கொடுப்பது என்ற யோசனையாகத்தான் இருக் கிறது.

சென்ற மூன்று வருஷமாக, டிசம்பர் கடைசியில் நடைபெறும் மியூஸிக் அகாடமி மகாநாடுகளில், தமிழிசை இயக்கத்தைக் கண்டித்துக் காரசாரமான பிரசங்கங்கள் செய்யப்படுவது வழக்கமா யிருந்தது. "தமிழ், சங்கீதத்துக்கு இசைந்த பாஷை இல்லை", "தமிழ்ப் பாட்டுப் பாடினால் கர்நாடக சங்கீதம் தொலைந்து போய்விடும்", தமிழிலே நல்ல சாஹித் யங்கள் இல்லை", "சங்கீதத்தில் பாஷைப் பிரச்னையைப் புகுத்தக் கூடாது" என்பதுபோன்ற அபத்தங்கள் சரமாரியாகப் பொழியப்பட்டன. கண்டனத் தீர்மானங் களும் செய்யப்பட்டன.

ஆனால் இந்த வருஷத்தில் எப்பேர்ப்பட்ட மாறுதல்? மியூஸிக் அகாடமி திறப்பு விழாவில் செய்யப்பட்ட

பிரசங்கங்களைத் தமிழிசை மகாநாட்டில் பேசிய ஸர் ஆர். கே. ஷண்முகம் ஆமோதித்து, "இவ்வருஷத்து அகாடமி பேச்சுக்களை ஒப்புக்கொள்ளுதல் எங்களுக்கு ஒரு ஆட்சேபமும் இல்லை!" என்று கூறினர்!

இப்படியாக இரண்டு மகாநாடுகளிலும் ஒரே ராகம், கொஞ்சம் 'சுருதி பேத' வேலைப்பாடுகளுடன், இந்த வருஷத்துத் திறப்பு விழாக்களில் பாடப்பட்டன.

இந்த வருஷத்துச் சங்கீத விழாப் பிரசங்கங்களில் ஸ்ரீ அழகப்பச் செட்டியாரின் பிரசங்கம் தலை சிறந்தது. அதில் ஒவ்வொரு வாக்கியமும் ஒவ்வொரு வரியும் படித்து அனுபவிக்க வேண்டியவை. ஆயினும், அதில் ஒரு முக்கிய அம்சத்தை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

சங்கீதம் முதலிய கலைகளில் சம்பிரதாயம் மிகவும் முக்கியமானது என்பதை ஸ்ரீ அழகப்பச் செட்டியார் நன்கு வற்புறுத்தியிருக்கிறார். உண்மையான சங்கீத ரஸிகர்கள்—முக்கியமாகத் தமிழிசை இயக்கத்து ரஸிகர்கள் அனைவரும்—இதை ஒப்புக்கொள்வார்கள்.

"சம்பிரதாயம்" என்றால் "பழமையான வழக்கு" என்று பொருள்.

சங்கீதத்தில் பழமையான வழக்கையே பின்பற்றுவதுதான் தமிழிசை இயக்கத்தின் அடிப்படையான நோக்கம்.

இப்போதையப் பிரபல சங்கீத வித்வான்கள் கையாளும் தெலுங்கு, சம்ஸ்கிருத கீர்த்தனங்கள் நூறு வருஷத்துக்கு உட்பட்ட சம்பிரதாயத்தைச் சேர்ந்தவை.



தமிழிசைக்காரர்கள் கைப்பற்ற விரும்பும் சம்பிரதாயமோ ஆயிரம் வருஷத்துக்கு முற்பட்ட சம்பிரதாயம்.

தியாகையர், தீக்ஷிதர் ஆகியவர்கள் நூறு வருஷத்துக்கு உட்பட்ட சாஹித்ய கர்த்தாக்கள். இவர்களுக்கு வெகு காலத்துக்கு முன்னால் முத்துத் தாண்டவர், அருணசலக் கவி ஆகியவர்கள் தமிழில் கீர்த்தனங்கள் இயற்றினர்கள்.

எனவே, சம்பிரதாயம் அல்லது பழமை வழக்கைப் பின்பற்றுவதில் தமிழிசைக்காரர்கள் மற்றவர்களை விட இன்னும் தீவிரம் என்றே சொல்ல வேண்டும்.

ஆனல், சம்பிரதாயம் அல்லது பழமை வழக்கு என்ற பெயரால் கலை வளர்ச்சியை அடியோடு தடுத்து விடக் கூடாது.

தமிழ்நாட்டின் பழைய சங்கீத சம்பிரதாயத்தை அடிப்படையாகக் கொண்டு தியாகய்யர், தீக்ஷதர் முதலியோர் அபூர்வமான சங்கீத மாளிகைகளைக் கட்டினர்கள்.

சங்கீத மும்மூர்த்திகள் கட்டிய மாடமாளிகைகளின்மீது, இனி வரப்போகும் மேதாவிகள், கூட கோபுரங்களைக் கட்டுவதற்கு இடமிருக்க வேண்டும்.

அந்த மேதாவிகள் எப்போது தோன்றுவார்கள் என்பது நமக்குத் தெரியாது. அவர்கள் தோன்றும் போது தாமே தெரியப்படுத்திக் கொள்வார்கள். அவர்களுக்கு வசதி செய்து கொடுப்பது தான் நமது கடமை.

மேற்கூறிய கடமையைத்தான் தமிழிசை இயக்கம் ஒருவாறு செய்து வருகிறது.

புதிய புதிய தமிழ் சாஹித்யங்கள் தோன்றுவதற்கு ஊக்கமும் வசதியும் அளித்து வருகிறது.

இப்படித் தோன்றும் புதிய சாஹித்யங்களில் எவற்றுக்கு ஜீவன் உண்டோ அவை நிலைத்து நிற்கும். ஜீவன் இல்லாதவை விழுந்துவிடும். இவற்றினால் சங்கீதம் போய்விடுமோ என்ற பயம் கொஞ்சம் வேண்டியதில்லை.

ஆகக்கூடி, தமிழிசை இயக்கத்தினால் கர்நாடக சங்கீதம் மேன்மைதான் அடையும் என்று ஸ்ரீ அழகப்பச் செட்டியார் மியூஸிக் அகாடமி மேடையில் கூறியதை நான் முழுமனதுடன் வரவேற்கிறேன்.

# முற்றுப் புள்ளி

நாளது 1946-ம் வருஷ ஆரம்பத்தில் தமிழகத்தில் அரசியல் சமரசமும் அமைதியும் ஏற்பட்டிருப்பதைப் போலவே, தமிழ்க்கலை உலகத்திலும் சமரசத்தை நிலை நாட்டக்கூடிய விசேஷ சம்பவம் ஒன்று நடந்திருக்கிறது.

சென்ற நாலு வருஷ காலமாகத் தமிழ் நாட்டில் தமிழிசை இயக்கம் சம்பந்தமாக ஓர் அனாவசியமான சச்சரவு நடை பெற்றுக் கொண்டிருந்தது.

முக்கியமாக, வருஷந்தோறும் டிசம்பர் கடைசியில் நடக்கும் சங்கீத விழாக்களின் தொடக்கத்தில் மேற்படி விவாத விழாவும் ஆரம்பமாகும். "தமிழில் நல்ல கீர்த்தனங்கள் இல்லை; தமிழ்மொழி சங்கீதத்துக் குகந்தது அல்ல" என்னும் பல்லவிகளை மியூஸிக் அகாடமி பிரசங்கிகள் பாடுவார்கள்.

"அப்படிச் சொல்வது அபத்தம்" என்று தமிழிசைக்காரர்கள் அநுபல்லவி பாடுவார்கள்.

இந்த விவாதம் கொஞ்ச காலம் தொடர்ந்து நடந்து ஒருவாறு அடங்கும் சமயத்தில், யாராவது ஒருவர் மறுபடியும், "தமிழிசை இயக்கத்தினால் கர்நாடக சங்கீதம் அழிந்து போகும்!" என்று சொல்லி வைப்பார். உடனே மறுபடியும் பழைய கதையேதான்.

நாளது 1946-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி, தமிழிசை மகாநாட்டுச் சங்கீத விழாவில் சங்கீத கலாநிதி ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் கச்சேரி செய்ததின் மூலம் மேற்படி வேண்டாத விவாதத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து முடிவு செய்திருக்கிறார்.

கர்நாடக சங்கீத உலகில் ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் வகித்து வரும் ஸ்தானம் அனைவரும் அறிந்ததே. மியூஸிக் அகாடமி மகாநாட்டில் அவர் அக்கிராசனம் வகித்துச் 'சங்கீத கலா நிதி'ப் பட்டம் பெற்றவர். திருவையாற்றில் நடைபெறும் ஸ்ரீ சற்குரு தியாகராஜ ஆராதன சபையின் காரியதரிசி.

திருவையாற்றில் மேற்படி தியாகராஜ ஆராதனை உற்சவம் சம்பந்தமாக நீண்ட நாளாகப் பெரிய கட்சி—சின்னக்கட்சி என்று இருந்து வந்த பிளவை நீக்கிச் சங்கீத வித்வான்களுக்குள் ஒற்றுமை உண்டாக்கியவர் ஸ்ரீ முசிரி அவர்கள்தான்.

தமிழ் நாட்டுச் சங்கீத ரஸிகர்களிடையே ஏற்பட்டிருந்த சச்சரவு நீங்கிச் சமரசம் நிலை பெறுவதற்கும் அவரே காரணமாகி யிருப்பது குறித்துப் பெரு மகிழ்ச்சியடைகிறோம்.

விவாதம் சமரசமாக முடிவதை விரும்பாத சண்டைப் பிரியர்கள் சங்கீத உலகத்தில் சிலர் உண்டு. அவர்கள் ஏதாவது விவாதத்தைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருப்பார்கள். அதை யெல்லாம் இனி நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.



தமிழிசையைக் கோருகிற சபைகளில் வித்வான்கள் தமிழ்க் கீர்த்தனங்கள் பாடட்டும். தியாகராஜர், தீக்ஷிதர் கீர்த்தனங்களைக் கேட்க விருப்பமுள்ள சபைகளில் அந்தப் பெரியார்களின் கீர்த்தனங்களைப் பாடட்டும். பொதுவான சபைகளில் தமிழ்க் கீர்த்தனங்களையும் மற்ற பாஷைக் கீர்த்தனங்களையும் கலந்து பாடட்டும்.

இவ்விதம் பொதுஜன அபிப்பிராயத்துக்கும் அந்தந்தச் சபையின் அபிப்பிராயத்துக்கும் மதிப்புக் கொடுத்து நமது சங்கீத வித்வான்கள் கச்சேரி செய்யும் பட்சத்தில் எவ்விதச் சண்டை சச்சரவுக்கும் இடமில்லாமலே போய்விடும். வெறும் சண்டைப் பிரியர்கள் தனித்து நிற்கும்படி நேரிடும்.

## அனுபந்தம்

எந்த விஷயத்தையும் ஆர அமர யோசித்து முடிவு கட்டும் வழக்கமுடையவர் ராஜாஜி. அதிலும் ஒரு இயக்கத்தைப்பற்றித் தம் கருத்தைச் சொல்லுவதென்ருல் ராஜாஜி ஒரு தடவைக்கு நூறு தடவை யோசனை செய்த பின்னர் தான் தன் அபிப்பிராயத்தைச் சொல்லுவார். அவர் செய்த முடிவே கடைசியில் சரியான முடிவாக இருக்கும். தமிழிசை இயக்கம் சம்பந்தமாக அவர் வெளியிட்ட கருத்துக்களை இதில் அனுபந்தமாகச் சேர்த்திருக்கிருேம்.

* * *

# தமிழ்ப் பாட்டு இயக்கம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

தமிழ்ப் பாட்டுக்கள் பாடவேண்டும் என்கிற கட்சியைச் சேர்ந்த பாமரர்களில் நான் ஒருவன். பாட்டுக் கச்சேரிகள் வைப்பதின் நோக்கம் என்ன? கேட்க வந்திருக்கும் ஆண் பெண்களின் உள்ளத்தில் மகிழ்ச்சியும் நல்ல உணர்ச்சிகளும் உண்டாக்குவதே அல்லவா? தமிழ் நாட்டில் நடக்கும் சங்கீதக் கச்சேரிகளில் அநேகமாகத் தமிழர்தான் கூடுகிருர்கள். தெலுங்கு தேசத்தில் தெலுங்கர்தான் கூடுவார்கள். தெலுங்கர் கூட்டத்தில் தமிழ்ப் பாட்டுக்கள் பாடுவது பைத்தியக்காரத்தனம் என்பது. அவ்வாறு யாராவது சங்கீதக்காரர் பாடிப் பார்த்தால் உடனே தெரிந்துவிடும். தமிழ் நாட்டிலோ, அநேகமாய்த் தெலுங்குப் பாட்டுக்களே பாடுகிருர்கள். அத்துடன் தமிழ்ப் பாட்டுக்கள் பாடவேண்டுமா என்பதையே விவாதிக்கிருர்கள். தமிழ்ப் பாட்டுக்கள் பாடுவதில் தமிழர் கூட்டத்திற்குப் பயன் உண்டா, அது கலை வளர்ச்சிக்குத் தகுமா என்கிற விஷயங்களைப்பற்றிச் சங்கீத வித்துவான்களுக்கு ஐயமாக இருக்கிறது. நல்ல தெலுங்குப் பாட்டுக்கள் கேட்டுக் கேட்டுப் பழகிவிட்டபடியால் பாட்டுப் பாடத் தெரியாத சங்கீத ரஸிகர்களுக்குங் கூடத் தமிழ்ப்பாட்டில் சங்கீதம் அடங்குமா என்று சந்தேகம் உண்டாகியிருக்கிறது.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் இவையெல்லாம் ஒரு குலத்தைச் சேர்ந்த மொழிகள். தமிழர் தெலுங்கு கற்றுக்கொள்வதும் தெலுங்கர் தமிழ் கற்பதும் மிக எளிதாகும். ஆயினும் தற்போது தெலுங்குப் பாட்டை ஒருவர் பாடக் கேட்டுத் தமிழர் பொருள் தெரிந்து அநுபவிக்க முடியாது என்பது யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயம். பாட்டுக் கச்சேரியில் கூடியிருக்கும் ஜனங்களுக்கு மகிழ்ச்சியும் நல்லுணர்ச்சியும் தந்து அவர்களுடைய சங்கீத அறிவையும் மேலும் மேலும் வளரச் செய்வது பாடகர்களின் கடமை. ஆகையால் தமிழ்க் கூட்டங்களில் பாட்டுக்கள் தமிழாக இருப்பது நலம்; தெலுங்குக் கூட்டங்களில் பாடும் பாட்டுக்கள் தெலுங்காக இருப்பது நலம்; மிசிரமான கூட்டங்களில் தகுந்த முறையில் கலப்பாகத் தமிழும் தெலுங்குமாக இருப்பது உசிதம். தராசு வைத்து நிறை போட்டு வீதாசாரப்படி பாடவேண்டுமென்று நான் சொல்ல வரவில்லை; கண்ணை மூடிக்கொண்டு கூட்டத்தில் பெரும்பான்மையோருக்குப் புரியாத பாஷையில்

பாடித் தள்ளுவது சங்கீத வளர்ச்சிக்கு உதவாது என்று தான் சொல்லுகிறேன்.

* * *

**மா**னிடக் குரலின் வழியாக இசையுடன் கிளம்பும் மொழியில் உள்ள அமுதத்தை வீணுக்கி, பாட்டிலுள்ள நாதக் கோவையை மட்டில் ஜனங்களுக்குத் தந்து சங்கீதத்தின் பயன் முடிந்தது என்று சொல்லுவது பெருந் தவறு என்பது என் அபிப்பிராயம்.

**குழல் இனிது யாழ் இனிது என்ப தம் மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர்**

தம் மக்கள் மழலைச் சொல்தான் தாய்மொழியாகிறது. தாயின் மொழியே முன் மழலையாகி, பின் தமிழாகிறது. தாய்மொழியைத் தள்ளிவிட்டு வேறு மொழியே இனிது என்று எவ்வாறு சாதிக்க முடியும்? குழலும் யாழுங் கூடத் தாய்மொழிக்கு ஈடாகாதே! நமக்கு நன்ருகப் பொருள்படாத அயல் மொழி எவ்வாறு ஈடாகும்? திருவள்ளுவர் பாட்டின் கருத்து வேறு, நான் சொல்லுவது வேறு என்று புலவர்கள் எண்ணலாம். ஆழ்ந்து பார்த்தால், நான் சொல்லும் பொருளும் குறளில் அடங்கியிருப்பது தெரியவரும்.

பள்ளிக்கூடங்களில் குழந்தைகளுக்கு அறிவு ஊட்டுவதற்குத் தாய்பாஷையே சரியான சாதனம் என்பதை எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள். இதற்கு மாருக, சென்னையிலுள்ள பெரிய வாத்தியார்கள் எல்லாருக்கும் ஆங்கிலத்தில்தான் நன்ருகப் பேசமுடியும்; அவர்களை வைத்து ஆங்கிலத்திலேயே குழந்தைகளுக்குப் பாடம் நடத்தச் சொல்லலாம்'' என்று யாராவது சொன்னுல், இது அறியாமை என்போம். குழந்தைகளின் படிப்புக் கெட்டுப்போகும் என்போம். குழந்தைகள் படிப்பு மாத்திரமேயல்ல; கடவுளைத் தோத்திரம் செய்து வரம் பெறுவதற்கும், மனச்சாந்தியோ தைரியமோ அடைவதற்கும் தாய்மொழியில் பாடி முறையிடுவது பக்தர்களின் வழி. இதை விட்டுவிட்டு வேறு பாஷையில் அமைக்கப்பட்ட தோத்திரப் பாக்களை நமது பக்திக்கு உதவியாகக் கொள்ளமுடியுமா? பக்தியும்—குழந்தைகள் படிப்பும் மாத்திரமேயல்ல, எல்லாவித உயர்ந்த உணர்ச்சிகளும் தாய்மொழியில்தான் சரிவர வடிவம் பெறும். இது பொதுவான உண்மை.



* * *

**நா**தமும் உணர்ச்சியும் கலந்து உண்டாகும் அமுதத்திற்கு இசை என்று பெயர். நாம் அறியாத பாஷையில் நமக்குப் பொருளற்ற சப்தத்தைக் கொண்டு சம்பாதிக்கும் ஸ்வர இன்பம் குறைவுபட்ட இன்பமேயாகும். அதைவிட வெறும் வீணை, பிடில், புல்லாங்குழல், மிருதங்கம் இவைகளை வைத்துக் கொஞ்சநேரம் கச்சேரி நடத்திவிட்டு முடிப்பது நலம். வாய்ப்பாட்டு வித்வான்களை நீண்ட நேரம் பாடச் சொல்லித் தொண்டையைச் சிரமப்படுத்திக் கொள்ளச் செய்வானேன்? **மொழியும் பொருளும் இருந்தால்தான் மானிடக் குரல் இசையாகும்; இல்லாவிடில் வெறும் ஓசைதான்.**

தாய்மொழியாகாத வேறு பாஷையில் பாடியதைக் கஷ்டப்பட்டுப் பொருள் உணர முடியுமாலுைங் கூட, தாய்பாஷையில் ஒரு பாட்டைக் கேட்பது போல் நம்முடைய உள்ளம் கரையாது; உணர்ச்சி பொங்காது.

இந்த உண்மை ஒரு சிலருக்குப் புலப்படாமல் போவதற்குக் காரணம் அவர்கள் ஆயுள் முழுதும் தெரி யாத பாஷையிலேயே பாட்டுக்கள் கேட்டுக் கேட்டு உண்டான பழக்கமேயொழிய வேறில்லை. இந்தப் பழக் கத்தினுல் ராகமும் தாளமுமே இசை என்கிற தவருன முடிவுக்கு அவர்கள் வந்திருக்கிருர்கள். உடன் நிகழ்ச்சி யாகிய நிழலை ரஸம் என்று நினைத்துத் திருப்தி அடை கிருர்கள்.

* * *

சில வித்வான்கள் நன்ருகப் பாடுகிருர்கள்; சில வித்வான்கள் சமாராகப் பாடுகிருர்கள். பாடும் பாட்டு தமிழாகவும் இருக்கலாம்; வேறு பாஷையாகவும் இருக் கலாம். பாடுகிறவர்களின் திறமையையோ திறமைக் குறைவையோ பாஷையின்மேல் வைத்து விஷயத்தைக் கலவரப்படுத்திக் கொள்ளக் கூடாது. நல்ல சாரீரமோ, வித்வத் திறமையோ இல்லாதவர்களிடமும் தமிழ்ப் பாட்டைக் கேட்டுவிட்டு, தமிழைக் குறை சொல்வது சரியாகாது. கலைஞர்களுடைய ஏற்றத்தாழ்வு வேறு, எவருக்கு எந்த மொழி பயன்படும் என்பது வேறு. தியாகய்யருடைய கீர்த்தனைகள் தெலுங்கிலிருப்பதால் அது பாஷைப் பிரச்னையைத் தீர்க்காது. தியாகய்ய ருடைய உள்ளத்தில் பக்தியும் நாதமும் பொங்கிக் குதித் துப் பிரவாகமாக அவருடைய மழலைச் சொல்லில் பெரு கிற்று. இதனுல் தமிழர்களான நாம் தெலுங்கில், நமக்கு நன்ருக விளங்காத மொழியில், பூரண இசை இன் பத்தை அனுபவிக்க முடியுமா?

கேட்போரின் இன்பத்திற்கும் உணர்ச்சிப் பெருக் குக்கும் தாய்பாஷை இன்றியமையாதது. இந்தத் தாய்



மொழிக் கிளர்ச்சியானது இசையில் மாத்திரமல்ல, எல் லாத் துறைகளிலுமே ஓங்கி வளரவேண்டும். ஆனால் இந்தக் கிளர்ச்சியில் ஜாதி, சுயநலம், கட்சிபேதம், கோபம், துவேஷம் இவைகளைப் புகுத்தி இயக்கத்தைக் கெடுக்கக்கூடாது. துவேஷமும் கோபமும் கலைமக ளுக்குப் பக்கத்திலும் வரக்கூடாது. வெள்ளைத் தாம ரைப் பூவிலிருக்கிருள் கலைத் தெய்வம். அவள் வாகன மும் மெல்லிய அன்னப்பறவை. இந்தக் கற்பனைகளின் பொருள் என்னவென்ருல், முரட்டுத்தனத்திற்கும் கலை மகளுக்கும் வெகுதூரம் என்பதே. மலராஸனம் நசுக் கப் படாமலும் அன்னம் மிரண்டு ஓடாமலும் கலைமக ளிடம் வரம்பெறச் செல்லவேண்டும். இது ஒன்றே இந்தக் கிளர்ச்சியைப்பற்றி நான் சொல்லவேண்டிய எச்சரிக்கை. தாய்மொழியை விட்டால் வேறு வழி யில்லை என்பது உறுதி.